

திருமலை திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுககும)கட்டணம ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிபபது மாத்திரம)

| | | |
|---|---|---|
| சிறபபு தரிசனம் | ரூ. | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்)பிறகு தரிசனம | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம | ,, | 4 |
| திருமஞ்சனம ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமநத்ரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிணணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிணணி | ,, | 100 |
| ஜாபாராக் கிணணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2500 |
| திருப்பாவாடை | ,, | 5000 |
| கோயிலாழ்வார் திருமஞசனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸநதோத்ஸவம் | ,, | 2500 |
| பிரம்மோத்ஸவம | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம ஸூர்யப்ரபை, புஷ்பரதம, முத்துப்பந்தல, தஙககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிமஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சநதிரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒனறுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 455 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 220 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்துழை | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிபபு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும, திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும நடைபெறும்.

மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருபபதி தேவஸ்தானம,
திருப்பதி 517501.



தொண்டரடிப் பொடியாழ்யார்.

“ செய்யும் பசுந்துளபத்தொழில் மாலையும் செந்தமிழில்
பெய்யும் மறைத்தமிழ் மாலையும் பேராத சீர் அரங்கத்து
ஐயன் கழற்கு அணியும் பரந்தாள் ஆதரியா
மெய்யன்………”

*(போட்டோ: S. V. K S. ஸ்ரீநிவாசன்-திருப்பதி)*






# ஸப்தகிரி

மலர்: 9 ஜனவரி 1979 இதழ் 8

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியா:
திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத், I.A.S.,
செயலாட்சித்தலைவா,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியா:
திரு. கே. சுப்பாராவ, எம். ஏ.
தி. தி. தேவஸதானம,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸதான அச்சகம,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப் படம்: ஸ்ரீவேங்கடேஸ்வரர்-திருமலை.

(சில தவிர்க்க முடியா காரணங்கள் முன்னிட்டு இம்மாத இதழில் முக்கவி கண்ட காப்பியம், மறறும் தில்லையில் நந்தனும் குலசேகரரும் எனும் தொடர் கட்டுரைகளை வெளியிட முடியவில்லை.)

(ஆர்.)

# ஆசிரியர் உரை

''வணங்கும் துறைகள் பல பலவாக்கி மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பல பலவாக்கி அவையவை தோறும நின் மூர்த்தி பரப்பி வைத்தாய்'' என்று சடகோபன் கூறிப்போந்தது போன்று, வாழ்க்கையின் பல்வேறு தரமுடையாரை யும உய்யும் பொருட்டு எண்ணிலா சமயங்களைத் தோற்றுவித்து, இமமையிலும் மறுமையிலும் இன்ப வாழ்க்கையினை அனுபவிககும் வகையான் மனிதனைப் பக்குவபபடுத்தி இறுதியில பிறவா நெறிக்கு வழி கோலுவதே அச்சமயங்களின் இறுதி நோககம். ஆனல அவ்வவ் சமயங்களுக்குள காணப்படும் தனித்தன்மைகளை நாம் மறைக்க முடியாது. ஆம, மற்றைய சமயஙகளுக்குத் தததுவ ஊற்ருக இந்து சமயம் விளங்குகின்றது. மற்றைய தத்துவஙகளைப் போனறு மேலோட்ட மான வாழ்ககை ஒழுகலாறுகளைபபற்றிய விளக்கங்களை கொண்டொழுகாது, மனித ஆன்ம உணர்வினை தட்டியெழுப்பும் வகையில பரம்பொருள்பற்றிய உண்மைகளையும், அவன் படைத்த இபபரநத உலகததைபபற்றியும், அவவுலக வாழ்க்கைப் பற்றியுமான தத்துவக் கோட்பாடுகளையும விளக்கி பிற சமய தததுவங்களுக்கு ஓர் வழிகாட்டியாக அமைந்துள்ளது. இநதியன் தன் சமயத்தை, ஒரு பொழுது போக்கு சாதனமாகவோ அல்லது ஒரு குறிபபிட்ட நாளில கூடும் ஒரு சடங் காகவோ அமைத்துக் கொள்ளவில்லை. இநது சமயம கூறும தத்துவஙகள் யாவும வாழ்க்கையினூடே பின்னிபபிணைந் தவை. ஆம. அன்ருட வாழ்க்கை அனுபவங்களின்மீது கட்டப்பட்ட பெருமாளிகையே அது. ஆகையால்தான், இன்று வரை இவ்வுலகம் கண்ட தத்துவக் கருததுககளுக்கெல்லாம், இந்து சமயம் தோன்றிய இப்பாரதம ஓர் தொட்டிலாக விளங்குகினறது. உலக வரலாற்றினை மேலெழுந்தவாரியாக படித்தவர்களகூட, ஐரோப்பிய கலாசாரத்திற்கும், நாகரிக வாழ்க்கைக்கும் வழிகாட்டிய கிரேக்கர்கள்கூட இந்து சமயததிற்கு பெரிதும் கடன பட்டிருககின்றனர் என்றே கூறுவர்.

இத்தகு பெருமையுடன் விளங்கும் இந்து சமயத்திற்கு உயிர்நாடியாக, அடித்தளமாக திகழ்வது தொல்காப்பி யத்தால 'அறிவன் நூல்' என்றும், குறளால் 'அந்தணர் நூல்' எனவும், புறநானூற்ருல் 'திறவோர் காட்சி'யாகவும் விளங்கும எழுதா இலக்கியமான வேதமாகும். கருத்தாழத்தால் உள்ளத்தை உயர்த்தி வாழ்வளிக்கும் இவ்வேதத்தினை ஆதாரமாகக் கொண்டு இறைவுணர்வோடு பாவ, புண்ணிய மோட்ச நகரஙகளில் நம்பிககை யூட்டி, மேலும் வேத நெறி செழிததோஙக வழி செய்வது வைதிக சமயமான இந்து சமயம். வேதத்திலிருந்து தோன்றி வேதக்கருத்துக்களோடும் வைதிக நெறிகளோடும் உறவு கொண்டு, அககருத்தினையும், நெறியினையும் பரப்பும் பணியில் இரகசியமாக தன்னை வளர்த்து கொண்டும் வரும் சமயம் இந்து சமயம. பிறருக்கு அறிவளிக்கும் மெய்யறிவை உய்ததுணரும் வகையில் மறை பொருளாக விளங்கி ஸப்த லாபம், அர்த்த லாபம் ஆகிய இரணடினையும் வழங்கும் செய்யா மொழியான வேதத் தின் சிறப்பினை ''வேதத்தைவிட்ட அறம் வேறில்லை; வேதத்தை ஓதியே வீடு பெற்றுர்கள்'' என்று கூறுகிருர் திருமூலர்.

இந்தியக் கலாசாரத்தின் ஊற்ருக விளங்கும வேதத்தில் பொதிந்திருக்கும் தத்துவ முத்துக்கள் யாவும், மற்றைய சமய மறை நூல்களைப் போன்று இறைத்தூதுவர்களால் மற்றவர்க்கு கூறபபட்டவையன்று. இறைவனைப்பற்றிய உண்மையை, வாழ்க்கை இரகசியங்களை இறைவனிடமிருந்து நேரடியாகவோ, அல்லது மறைமுகமாகவோ மாமுனிவர்களா லும், ஞானிகளாலும் பெறப்பட்டு, உணரப்பட்டு பிறருக்கு உணர்த்திதவையாம். வேதததில் காணபபடும் தத்துவக் கருத்துக் கள் பின்னர் ஏற்பட்ட உபநிஷத்துக்களுக்கு வித்திட்டன. அதில காணப்பெறும தெய்வீகக் கருத்துக்களால் அடைக்கப்பட்ட சமயக் கோட்பாடுகள் யாவும் யோகம் எனும் ஒரு மன, உடல் பயிற்சி சாதனம உருவாக காரணமாக அமைந்தன. அதில் விளக்கப்பட்ட இவ்வுலகத்தைப்பற்றிய அடிப்படை உண்மைகள் யாவும், இவ்வண்டத்தைப பற்றியும், உளநூல் பற்றியும் விளக்குமபடியான சாங்கியத் தத்துவம் தோன்ற வழி வகுத்தன. அதில் கூறப்பட்ட வைதிக முறைகள், புரோகிதற்குரிய இயல்புகள் யாவும் மீமாஸ்ச விதி முறை ஒன்று ஏற்பட காரணமாயிற்று. அதில் செப்பிய தியானம் மற்றும் வழிபடு முறைகள் யாவும் சைவம், வைணவம், சாகதம் போன்ற மதங்களில் பகதி இயக்கங்கள் தோன்ற பெரிதும் உதவின. அதில் அறிவுறுத்தப்பட்ட சமூகக் கோட்பாடுகள் பழக்க வழக்கஙகள் ஆகியன பின்னா நடைமுறை ஆட்சியமைப்பிற்குத் தேவையான ஒழுங்கும் சட்டம் பற்றிய கட்டுத் திட்டங்கள் அடங்கிய ஸமிருதிகள் அல்லது தாம சாஸ்திரங்கள் ஏற்பட காரண மாயின. மகா சரஸ்வதியின பிஜாக்ஷரங்கள் எனப்படும் அகரம் முதல் க்ஷகரம் ஈருக 50 அக்ஷரங்களைக் கொண்டு விளங்கும் வேதத்தில் வரும் மந்திரங்களை தொடர்ந்து ஓத ஆகும் நேரம் 6000 மணி நேரங்களாம். இம்மந்திரங்களின் பெருமை, அவற்றின வலிமை ஒலியில்தான் அடங்கியுள்ளது. வழிவழியாக அவ்வேத மந்திரங்களை மனதால வாங்கி சிந்தனையால தேக்கி காத்து வந்துள்ளனர். ஆனுல் இந்நிலைமை இன்று பெரிதும மாறிவிட்டது. வேதத்தின் பல பகுதி களை வழிவழியாக ஓதிவரும இனததினர் சிதறுண்டு, மறைநதும் வருகின்றனர். வேதம் கற்றச சிலரும் இச்சமுதாயத்தால் புறககணிக்கப்பட்டு, வறுமையில் உழன்று வருகின்றனா. சமூக, சமய நிறுவனங்களும், அரசும தனி மனிதனின் தகுதியை வளர்த்து, அவனை உயர்த்தவே உள்ளன. மேலைநாட்டாரும், அநநாடுகளில உள்ள சில ஆராய்ச்சி நிலையங்களும் வேத உபநிஷத்துக்களின்மேல் காட்டும் ஈடுபாட்டிலும, விருப்பிலும் ஒரு சிறு பகுதியைகூட அப்புனிதக் கருத்துக்கள் தோன்றிய இப்பாரதத்தில் உள்ள மக்களோ, சம்பந்தப்பட்ட அரசோ காட்டவில்லை என்பது மறுகக முடியா உண்மை. இவ்வகையில் தன் சிறு முயற்சியை மேற்கொள்ளும் வகையில் அண்மையில் திருப்பதியில் திருமலை திருப்பதி தேவஸ் தானம் வேத கருத்தரஙகு ஒன்றினைக் கூட்டி, வேத விற்பன்னர்களை ஊக்குவிக்கும விதத்தில வேதங்களைக் காப்பாற்றும் வகையில பல திட்டங்களை மேற்கொண்டுள்ளது. இத்திட்டங்களால் ஒரு குறிப்பிட்ட பகுதியைச் சார்ந்த வேத பண்டிதர்கள் மட்டுமே பயன்பெறுதற்கான வாய்ப்பு அமையலாம். ஆனுல் இந்தியாவின் பல பகுதிகளில், வேதத்தின் ஒரு குறிப்பிட்ட பாகங்களில் தேர்ச்சியும் புலமையும் பெற்றுள்ள பலர் வாழ்ந்து கொண்டிருக்கலாம். அவர்களையும் ஊக்குவிக்கும் விதத் தில் சம்பந்தப்பட்ட மாநில அரசுகளும், இந்தியாவில் விளங்கும் எல்லா பகுதி வாழ் வேதம் மற்றும் வடமொழி பண்டி தர்களை ஒன்று கூட்டி அனைத்திந்திய அளவில் வேத மாநாடு ஒன்றினை ஏற்பாடு செய்ய மத்திய அரசும், தி. தி. தேவஸ் தானம் அண்மையில் மேற்கொள்ளப்படவிருக்கும் திட்டங்களை மனதிற்கொண்டு, விரைவில் செயற்பட வேண்டும். இல்லா விடின் இப்புண்ணிய பாரதம் காலப்போக்கில் பெருங்காயம் இருந்த பாத்திரமாகவே இருந்துவிடும்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

(17-11-78 அன்று, ஹைதராபாத்தில் கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு)

வேத பண்டிதர்களுக்கு அளிக்கப்படுவதைப் போலவே ஊதியம் மற்றும் எல்லாவித பஞ்சப்படிகளை வேத பாராயணதாரர்களுக்கும் வழங்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

திருப்பதி அருகே உள்ள முதயாலு ரெட்டி பள்ளி வாழ் பொது மக்கள் பயன்பெறும் வகையில், திருப்பதியில் தி. தி. தேவஸ்தான திருமண மணடபம் ஒன்றினைக் கட்டுதற்கு குழு ஒப்புதல் அளித்துள்ளது.

ஆந்திர மாநில அறநிலையத் துறையினரால் வெளியிடப்படும் சமய இதழான 'ஆராதன' எனும் பத்திரிகைக்கு 1978-79-ம் ஆண்டுக்கான நன்கொடையாக ரூ. 2000 வழங்க குழு முடிவு செய்துள்ளது.

விஜயவாடாவில் சித்தார்த்த கல்லூரி கட்டட அரங்கில் கட்டப்பட்டு வரும் ஸ்ரீ வேங்கடேஸ்வரா வழிபாடு அரங்கிற்கு ஒதுக்கப்பட்ட தொகையின் மறுபாதியை (முன்பே இப்பணிக்காக குழு ரூ. 2.5 இலட்சம் ஒதுக்கியுள்ளது) மேலாண்மையின் மேற்பார்வைக்குப் பின்னர், வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

பம்பாய் செம்பூர் செத்தா நகரிலுள்ள ஸ்ரீ சுப்ரமண்ய சமாஜ் கோயில் கட்டிடத்திற்காக ரூ. 5 இலட்சம் வழங்க குழு முடிவு செய்துள்ளது.

ஆந்திர மாநிலம் கம்மம் மாவட்டத்தில் அன்னபூரெட்டி பள்ளியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபத்துடன் இணைந்த சத்திரத்தினை, அவ்வூர் ஸ்ரீ பாலாஜி வேங்கடேஸ்வரசுவாமி தேவஸ்தானத்தாருக்கு மேலும் மூன்று ஆண்டுகளுக்குக் குத்தகைக்கு விடுவதென்று குழு தீர்மானித்துள்ளது.

தி. தி. தேவஸ்தானத்தின் தேவைக்கென் 8 புதிய இந்துஸ்தான் அம்பாஸிடர்-மார்க் 3 கார்களும், இருக்கும் மிகப் பழைய கார்களுக்குப் பதிலாக புதிய கார்களும் வாங்குதற்கு குழு அனுமதி அளித்துள்ளது.

'திருப்பதி வரலாறு' எனும் ஆங்கில நூலினை தெலுங்கில் மொழிபெயர்த்த ஸ்ரீ டி. ரங்கநாதா சார்யலு அவர்களுக்கு சிறப்பூதியமாக ரூ. 1,116/- வழங்கவும், மேற்படி நூலினை பிரசுரித்தப் பிறகு, அந்நூலின் 25 பிரதிகளை அவருக்கு இலவசமாக வழங்கவும் குழு இசைந்துள்ளது.

திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தின் 3-வது புதிய சத்திரத்தின் மேற்கே உள்ள காலி மனையில் தி. தி. தேவஸ்தான ஊழியர்களுக்கான இரு குடியிருப்புக் கட்டிடங்களைக் கட்டுதற்கென ரூ. 1,42,000 வழங்க குழு தீர்மானித்துள்ளது.

தி. தி. தேவஸ்தான வழக்குகளை மேற்கொள்ளும்போது, அவ்வழக்குகளுக்காக வாதாடும், தேவஸ்தானத்தரால் நியமிக்கப்பட்டுள்ள வழக்கறிஞர்களுக்கு வழங்கப்படும் நாள் ஒன்றிற்கான படியை ரூ. 50 லிருந்து ரூ. 100 ஆக உயர்த்த குழு முடிவு செய்துள்ளது.

இந்த நடப்பு ஆண்டிலிருந்து திருமலையிலுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா வேத பாடசாலையில் கற்றுத் தரப்படும் திவ்வியப் பிரபந்தத்தின் பூர்வா பாகா படிப்பின் காலவரையறையினை நான்காண்டிலிருந்து ஐந்தாண்டாக உயர்த்தவும், மேற்படி கல்வியில் பயிற்சி பெறும் மாணவர்களுக்கு மாதந்தோறும் வழங்கப்படும் ஊக்க ஊதியத்தினை ரூ. 60 லிருந்து ரூ. 150-ஆக உயர்த்தவும் குழு ஒப்புதல் அளித்து, தன் முடிவினை அரசு ஒப்புதலுக்காக அறநிலையத் துறைக்குப் பரிந்துரையும் செய்துள்ளது.

காளஹஸ்தியில் இதுவரை காளஹஸ்தீஸ்வர தேவஸ்தானத்தாரின் குத்தகையின்கீழ் இருந்த தி. தி. தேவஸ்தானத்தாரின் சத்திரத்தினை தேவஸ்தானமே (தி.தி.தே.) ஏற்றுக்கொண்டு செயற்படுத்துவதென்று குழு தீர்மானித்துள்ளது.

மேற்கு கோதாவரி மாவட்டம் தனுகு எனும் ஊரில் கட்டடப்படவிருக்கும் திருமண மண்டபத்திற்காகும் செலவில் பாதியை அதாவது ரூ. 3 இலட்சத்தினை தி. தி. தேவஸ்தானம் ஏற்பதென்று குழு முடிவு செய்துள்ளது.

திருமலையிலுள்ள பாபநாசம் அணைக்கட்டுப் பணிகளுக்காக, புதிய 315 கேவிஏ டிரான்ஸ் பார்மர், கண்ட்ரோல் ஸ்விட்ச் போர்டு ஆகியவற்றை வாங்குதற்கு குழு ரூ. 2,00,000 ஒதுக்கியுள்ளது.

ஸ்ரீகாகுளம் மாவட்டம் ரஹ்மான் புரத்திலுள்ள ஹரிஜனவாடாவில் ராம மந்திரம் ஒன்றினைக் கட்டுதற்கு ரூ. 5,500-ம், மேற்படி மாவட்டத்தில் ஃபஸுல்பாக்பேட்டையிலுள்ள ஹரிஜன வாடாவில் ராம மந்திரம் ஒன்றினைக் கட்ட ரூ. 10,000-ம் வழங்க குழு அனுமதி அளித்துள்ளது.

திருமலை கோயில் பெயிஷ்கார் திரு. எஸ். முனுசாமி நாயுடு அவர்களை திருமலை தி. தி. தேவஸ்தான உதவி செயலாட்சித் தலைவராகவும், பெயிஷ்கார் நிலைப்பிரிவில் உள்ள அலுவலர்களில் மூத்தவரான திரு. ஆர். வாசுதேவ நாயுடு அவர்களை திருப்பதி தி. தி. தேவஸ்தான உதவி செயலாட்சித் தலைவராகவும் நியமிக்க குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திர மாநிலத்திலுள்ள பல்வேறு நகரங்களிலும் கிராமங்களிலும் உள்ள பல்வேறு கோயில்களைப் புதுப்பித்தல் பணிகளுக்காக குழு ரூ. 4,70,700 ஒதுக்கியுள்ளது.

தமிழ்நாடு முசரி தாலுக்காவில் நாகயநல்லூரில் வள்ளி கோயில் ஒன்றினைப் புதுப்பித்தல் பணிக்காக குழு ரூ. 15,000 ஒதுக்கியுள்ளது.



# வேத கருத்தரங்கும் அதன் அவசியமும்

[திருப்பதியில ஸ்ரீ அன்னமாச்சார்யா கலாமந்திரத்தில் இந்து தர்ம பிரதிஷ்டா னத்தின் ஆதரவில் 2–12–78 முதல 6–12–78 வரை 5 நாட்கள் நடைபெற்ற வேத கருத்தரங்கில், திருப்பதி இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் செயலாளர் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி அவாகள் ஆங்கிலததில் வாசித்த ஆண்டறிக்கை யின் தமிழாக்கம இங்கு வழங்கப் பட்டுள்ளது.]

இந்தியாவின் பெருமையைப் பறை சாற்றும் வகையில் திகழும் வேதங் களின் பெருமை அருமைகளை உணர்ந்து, அவற்றினைப் பாதுகாத்து புத்துயிர் அளிப்பதே இன்றைய பாரத மக்களின் புனித கடமையாக அமைய வேண்டும் என்பதை அவர்களிடையே உணர்த்தவே வேதம் சம்பந்தப்பட்ட இக்கருத்தரங்கு ஏற்பாடு செய்யப்பட் டுள்ளது.

வேத உபநிஷத்துக்கள் மற்றும் சாஸ்திரங்களின் சிறப்பினை நன் கறிந்து, இந்து சமயத்தின் மீது அள விலா ஈடுபாடு கொண்டு விளங்கி, இக் கருத்தரங்கு உடனடியாக நடைபெறு தற்கு ஊக்கமும் உதவியும் அளித்த தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் அவர்களுக்கும், இக்கருத் தரங்கினை துவக்கி வைக்க, பல அலுவல்களுக்கிடையே திருப்பதிக்கு வருகைபுரிந்துள்ள ஆந்திர மாநில அற நிலையத்துறை அமைச்சர் அவர்களுக் கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்து சமயத்தின் உயிர் நாடியாக விளங்கி, இப்புண்ணிய பாரதத்தில் வெளி நாட்டாரும் பெருமை பேசும் வேதம் மற்றும் சாஸ்திரங்களைப்பற்றிய கல்வி முறைகள் பல தலைமுறைகளாக பின்பற்றப்பட்டு, தற்போது அந் நிலை அதாவது வேதம் சம்பந்தப்பட்ட கல்விக்கான வாய்ப்பு மறைந்து வருவது நமது துரதிர்ஷ்டமேயாகும். இதற் கான காரணங்களை நாம் ஆராய்ச்சி செய்து அறிந்து கொள்ளத் தேவை யில்லை. சுற்றிவளைக்காமல் நேரடி யாகக் கூறப்புகின், வேதம் மற்றும் சாஸ்திரங்கள் பல கற்ற அறிஞர் பெருமக்கள் பலர் இன்று வறுமையில் உழன்று கொணடிருக்கின்றார்கள் என் பது தெரிந்த உண்மை. ஒரு துவக்கப் பள்ளி ஆசிரியர் பெறும் ஊதியம் கூட, வேதம் கற்ற ஒரு வல்லுநர் பெறுவதில்லை. அவர்கள் யாவரும் ஏதோ ஓர் ஒதுக்கி வைக்கப்பட்ட இனமாகவே கருதப்படுகிறார்கள். அவர்களுடைய புலமை, நடுகாட்டில் பூத்து வாடிவீழும் மணமிக்க மலர் களைப்போன்றே இருக்கின்றது. ஒவ் வொரு ஆண்டும் இந்திய அரசு கோடிக் கணக்கில் ரூபாயை கல்விக்காக செல வழித்தும், அக்கல்வியால் இலக்கிய முன்னேற்றத்திற்கோ விஞ்ஞான முன்னேற்றத்திற்கோ 01%கூட பயன் இல்லை என்பது யாவரும் அறிந்ததே. ஆண்டாண்டு பல பட்டதாரிகளை உற் பத்திசெய்யும் ஒரு தொழிற்சாலையா கததான் இன்றையப் பல்கலைக்கழகங் கள விளங்குகின்றன. அது மட்டுமா? கலவி நிறுவனங்களில் படித்துவரும் மாணவர்களுக்கிடையே கட்டுப்பாடும் பொறுப்புணர்வும் குன்றிவருகின்றது. உலகாயுத வாழ்க்கைக்குத் தேவை யான நன்னடத்தைப் பண்புகளே அவர்களிடம் மறைந்து வரும்போது, நாம் எவ்வகையில் அவர்களிடம் ஆன் மிகப் பண்புகளை எதிர்பார்ப்பது? இந் நிலைமையில் நாம் இறைவனை நம்பு வதைவிட, வேறு வழி நமக்குத் தோன்றவில்லை.

வேதம் மற்றும் வட மொழி கற்ற பண்டிதர்களுக்கு ஊக்கமளிக்க உணமையாகவே அரசாங்கம் விருப்பம் கொண்டுள்ளதா? அரசாங்கம் ஏன் இம்முயற்சியை மேற்கொள்ளக் கூடாது? போன்ற கேள்விகள் கேட் கப்படும் நிலையில் உள்ளன. வேத சாஸ்திரங்களில் முழு தேர்ச்சிப்பெற்ற பண்டிதர்களுக்கு அவர்கள் வாழ் நாள் முழுவதும் மாதத்திற்கு நபர் ஒரு வருக்கு ரூ. 500 சிறப்பூதியம் வழங்கப் படும் என்று அரசாங்கம் ஓர் செய்தி வெளியிடட்டும். ஒரே நாளில் நம் மிடையே பல அறிஞர் பெருமக்கள் உலவுவதைக் காணலாம். இத்திட்டத் தினையே நமது அரசு தனது நான்கு ஐநதாண்டு திட்டங்களில் சேர்த்துக் கொள்ளட்டும். இத்திட்டத்திற்காக செலவழிக்கப்படும் தொகை, உப்பு சப் பற்ற நமது பள்ளிக் கல்விக்காக ஒதுக் கப்படும் தொகையில் ஒரு சிறு துளியே யாகும்.

முக்கியத்துவம் அளிக்கப்பட வேண் டிய வேதம் மற்றும் வடமொழி கலா சாரத்தின் பெருமைதான் என்ன

---

பேயாழ்வார்-திருப்பதி

S. V. K. S. ஸ்ரீநிவாசன்-திருப்பதி.



என்று பலர் கேட்க நினைக்கலாம். இந்து சமயத்தைப்பற்றிய ஆராய்ச்சி செய்யும், உலகம முழுதும் உள்ள பல நிலையங்களும், மேலை நாட்டாரும் வேத உபநிஷத்துக்களின் பெருமையை கூறி யுள்ளனர். "உபநிஷத்துக்கள் என் வாழ்க்கையின் உயிர்த்துணை; இறக் கும் போது அவையே எனக்கு முழுச் சாந்தியை தரவல்லன" என மாக்ஸ் மூல்லர் கூறிப் போந்தார். மனிதனை தெய்வீகமாக்குவது வேதங்களே. ஆனால் தற்காலத்து கல்வி அறிவு ஒரு சாதாரண மனிதனுக்குத் தேவையான எந்தவிதமான வாழ்க்கை நலக்கூறு களையும் கற்றுத்தரவில்லை.

வேதக் கலாசாரத்தினைப் பாது காத்து போற்றும் விதத்தில் தி. தி. தேவஸ்தானம் மூன்று திட்டங்களை மேற்கொண்டுள்ளது. 1. வேதங்களை பதிவு நாடா மூலம் ஒலிப்பதிவு செய் வது 2. வேதங்களை மொழிபெயர்ப் பது 3. வேத-ரக்ஷண திட்டம் 4. குமார அத்யாயண திட்டம். என் உரையை முடிக்கு முன்னர் மேற்படி திட்டங்களைப்பற்றிய என் கருத்துக்கள் சிலவற்றை கூற விழைகின்றேன். வேதங்களை ஒலிப்பதிவு செய்யும் திட்டம் நன்றாக இருந்தாலும், இச் செயல், வேதம் கற்ற அறிஞர் மர பினரை நம்மால் சிறிதும் காப்பாற்ற முடியாது என்ற தவறான ஒரு கருத் திற்கு இடம் கொடுத்துவிடும் என்றே அஞ்சுகிறேன். இரண்டாவது வேதங் களை மொழி பெயர்த்தல். வட மொழி கற்றவர்கள் எல்லோராலும், வேதங் களை மொழி பெயர்த்துவிட முடியும் என்ற ஒரு தவறான கருத்து இன்று நிலவி வருகின்றது என்பதை அறி கின்றேன. ஏனெனின் வேதங்களின் உண்மைப் பொருளை அவ்வளவு எளி தாக நாம் பிறரிடமிருந்து அறிந்து கொள்ள முடியாது. மறை பொரு ளைப்பற்றி, பரம்பொருளின் பூரணத் துவத்தைப்பற்றி, வாழ்க்கையின் அடிப்படை உண்மைகளைப்பற்றி கூறும் வேதங்களின் பெருமை அவற் றின் வேகஉச்சரிப்பு ஒலியில்தான் அடங்கியுள்ளது. அதனால்தான் வேத மொழி என்று தன்னித்தே பெயரிட் டிருக்கின்றோம். இதை மனதிற் கொண்டுதான், சென்ற ஆண்டு நடை பெற்ற வேத கருத்தரங்கு விழாவில், இத்திட்டத்தினைத் துணிந்து மேற் கொள்ள வேண்டுமானால், வேதங்களில் காணப்படும் சங்கேத வார்த்தைகளைப் பற்றி எடுத்துக் கூறும் புலமைப் பெற்ற வழி வழியாக வேதம் கற்ற பண்டிதர்களையும், வேதம் மற்றும் வடமொழி சம்பந்தப்பட்ட கல்வியில் புலமைப் பெற்ற தற்காலத்து அறிஞர் களையும் ஒன்று கூட்டி, அவர்களைக் கொண்டு ஓர் உயர் மட்ட வேத ஆராய்ச்சி நிலையம் ஒன்றினை செயற் படுத்துதல் வேண்டும் என்று கூறியிருந் தேன். அடுத்தத் திட்டமான, ஆண் டொன்றுக்கு தி. தி. தேவஸ்தானத் தாரால் ரூ. 10 இலட்சம் செலவில் ஆரம்பிக்கப்படவிருக்கும் வேதரக்ஷண திட்டம், நிச்சயம், வேதம் கற்ற அறி ஞர்களின் பிள்ளைகளை ஊக்குவிக்கும் திட்டமாக அமையும் என எதிர் பார்க்கலாம்.

குமார அத்யாயண திட்டம், தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவரின் தனிப்பட்ட ஆலோசனையின்பேரில் ஏற்படுத்தப்பட்ட சிறந்த திட்ட மாகும். இத்திட்டத்தின் கீழ், வேதத்தில் பயிற்சி பெறும் மாணவர் களுக்கு அவர்களை ஊக்குவிக்கும் வகையில் ஊக்கத் தொகை ஒன்று கொடுக்கப்படல் வேண்டும். அல்லது பயிற்சி பெற்ற பிறகு அவர்களுக்கு மாதம் ரூ. 500 ஊதியம் கிடைக்கும் வகையில் ஒரு வேலையோ அல்லது ஒரு சிறப்பூதியமோ வழங்கப்படல் வேண்டும். இல்லாவிடின், அவர்கள் ஆங்கிலப்பாடக் கல்வித் திட்டத் தினையே மேற்கொண்டுவிடுவர் என்றே அஞ்சுகிறேன் ஆகவே இந்தியக் கலா சாரத்தின் சாரமாக விளங்கும் வேத உபநிஷத்துக்கள் மற்றும் ஸம்ஸ்க்ருதத் தின் பழைமையையும் பெருமையையும் காத்து வளர்த்திட சீரிய முயற்சி களுடன் அரசு முன்வரவேண்டும் இல்லாவிடின், தனது 'ஊதாம் தன்மையை' இறைவன காப்பாற்றிக் கொள்ள, அதற்கு உதவும் வகையில் தன்னைப்பற்றிய உண்மை விளக்கங் களைக் கூறும் வேதங்களை காப்பாற்ற அவ்வேங்கடவன்தான் முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

(தமிழாக்கம்: உமாராம்)

## சந்தாதாரர்களுக்கு...

28-2-79-ம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும்.

T

*11, 33, 38, 88, 189, 231, 251, 286, 287, 311, 378, 591, 635, 678, 715, 751, 789, 880, 896, 992, 995, 1014, 1018, 1053, 1135, 1514, 1553, 1594, 1633, 1699, 1702, 1705, 1706, 1707, 1708, 1710, 1711, 1712, 1720, 1723, 1734, 1738, 1741, 1742, 1743, 2473 முதல் 2486 வரை, 2488 முதல் 2496 வரை, 2499 முதல் 2503 வரை, 2505 முதல் 2523 வரை, 2717.*

# வேதம்-இந்தியக் கலாசாரத்தின் உயிர்நாடி

*(திருப்பதியில் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் 2-12-78 முதல் 6-12-78 வரை 5 நாட்கள் நடைபெற்ற வேதக் கருத்தரங்கினைத் துவக்கி வைத்த ஆந்திர மாநில அற நிலையத்துறை அமைச்சர் திரு. வி. வெங்கட நாராயண அவர்களின் தெலுங்குச் சொற்பொழிவின் தமிழாக்கம் இங்கே வழங்கப்பட்டுள்ளது.)*

வேத பண்டிதர்கள் பலர் குழுமியிருக்கும் இச்சபையில், திருப்பதி இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் ஆதரவில் நடைபெற இருக்கும் இவ்வேத கருத்தரங்கினைத் துவக்கி வைத்து உரையாற்றும் இவ்வாய்ப்பு எமக்கு கிடைத்தமைக்கு நான் மிகவும் மகிழ்ச்சியும் பெருமையும் அடைகின்றேன். இக்கருத்தரங்கில் பங்கேற்க பல வேத வல்லுநர்கள், குறிப்பாக, ஆந்திர மாநிலத்தின் வேத நிலையமாகக் கருதப்படும் கோனசீமாவிலிருந்தும் பல வேத விற்பன்னர்கள் வருகை புரிந்துள்ளனர் என்பதை அறிந்தேன். ஒவ்வொரு இந்துவும், இந்து சமயத்தைப்பற்றி ஆராயும் மேலை நாட்டாரும் இந்து சமயத்தின உயிர்நாடியாக, அடித்தளமாக வேதம் விளங்குகின்றது என்பதை ஒப்புக் கொண்டிருக்கின்றனர். எந்த விஞ்ஞானியாலும் அறிய முயலாத, அறிய முடியாத ஒரு புதிராக இருக்கும் வேத இலக்கியமானது வாழ்க்கை இரகசியத்தின் ஆழந்த உண்மைகளை மனிதனுக்கு விளக்கி, இந்திய ஆன்மிகப் பெட்டகமாகத் திகழுகின்றது என்பது என் கருத்து. வேதங்களில் காணப்படும் வசிஷ்டர், ஜமதக்னி, பரத்துவாசர், விஸ்வாமித்ரர் போன்ற மாமுனிவர்களை ஒரு காலத்து நாம் பெற்றிருந்தது, நமது பாரதத்தின் பெருமையைப் பறை சாற்றும். சுருங்கக்கூறின், நமது பாரதம் எண்ணற்ற மந்த்ர-த்ரஷ்டர்களின் தொட்டிலாக விளங்கியது. அவர்கள் பிரம்ம சிந்தனையுடன் தெய்வீக எண்ணங்களில் உழன்று, உயரிய ஆன்மிகச் சாதனைகளின் மூலம் இறைவனைக் கண்டு, சமய உண்மைகளை தாமும் அனுபவித்து, பிறருக்கும் உணர்த்தும் ஆற்றலர்களாக விளங்கினர். இவ்வுண்மையை தினசரி பிரச்சனைகளால் சூழப்பெற்று உலகாயுதப் போராட்டங்களில் ஈடுபட்டுவரும் சாதாரண மனிதர்களால் உணர்த்த முடியாது. எயின்ஸ்டன் போன்ற



சுந்தரமூர்த்தி நாயனர்,
ஓவியம் ஸி. கே. கோவிந்தராவ் - திருப்பதி.

நவீன விஞ்ஞானிகளால்கூட, ''நமது உயிர் எங்கிருந்து எப்படி இவ்வுலகிற்கு வந்தது. இதற்குப்பின் அதன் போக்கிடம் எங்கே' போன்ற கேள்விகளுக்கு விடை காண முயன்று இறுதியில் ஆர்வமிழந்து ஒருவித பதிலும் காண முடியாது செயலற்றனர். மாக்ஸ்முல்லர் கூறியபடி "உபநிஷத்துக்கள் மனிதனது வாழ்வில் துயர் தீர்க்கும் நண்பனாகவும், இறக்கும் போது சாந்தி தந்திடும் சாதனமாகவும் விளங்குகின்றன'' என்று கூறியது போன்று, எந்தவிதவிஞ்ஞானத்தாலும் கூறமுடியாத உயர்ந்த, உண்மையான வாழ்க்கைத் தத்துவக் கருத்துக்களை அவற்றால் மட்டுமே வழங்க முடிந்தது. இந்தப் பேருண்மைகளை, மாயா மயக்க நிலையை வெற்றி கொண்ட, பரிபூரணனை அப்பரம்பொருளைக் கண்டு கொண்ட பண்டைய பாரதத்தில் தோன்றி மறைந்த மாமுனிவர்களால் மட்டுமே அனுபவத்தறிந்து நமக்கு உணர்த்த முடிந்தது. இத்தகு பெருமைமிகு வேத கலாசாரத்தையும், வேதத்தின் கரை கண்ட அறிஞர்களையும் பெற்ற இப்புண்ணிய பாரதத்தை நாம் நம் தாய் நாடாகக் கொண்டது நமது நல்வினைப் பயனேயாம்.

பல்வேறு எதிர்ப்புகளுடன்கூடிய இச்சூழ்நிலையிலும் வேதம் கற்ற பல அறிஞர் பெருமக்கள் இன்றும் நம்முடன் வாழ்ந்து வருவது, நமக்கு பெரு மகிழ்ச்சியும் பெருமையையும் தரும். ஆனால் இன்று, பல்கலைக் கழகங்களில் படித்துப் பட்டம் பெற்ற பேராசிரியர் குழாமிற்கும், பண்டைய மரபுனூடே, எல்லையில்லா அறிவின் களஞ்சியமாக விளங்கும் வேதம் படித்த வித்தகர்களுக்கும் ஓர் பெருத்த இடைவெளி தோன்றியிருப்பது வருநதத்தக்க தொன்றாகும். துரதிர்ஷ்டமாக அவர்களுக்குள்ளேயே ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ள முடியாத, படித்த மற்றவர்களாலும்

அவர்களை அறிந்துகொள்ள இயலாத ஓர் சூழ்நிலை இன்று நிலவி வருகின்றது. ஆங்கிலம நவீன வாழ்க்கைக்குச் சம்பந்தப்பட்ட ஓர் பரந்த பொது நோக்கினை-அறிவினை நமக்கு வழங்கிட்டாலும், அம்மொழியின் ஊடுருவினல், நமது இந்தியக் கலாசாரத்துடன் நாம் கொண்ட பிணைப்பு சற்றே தளர்ந்துள்ளது என்பதை மறுக்க முடியாது. ''இந்தியர்கள் அவர்களது பெருமைமிகு கலாசாரத்தைவிட்டு வெகுதூரம் வந்துவிட்டார்கள். வேதங்களின் பெருமை அறிந்து, அவற்றிற்குப் புத்துயிர் அளிக்க அவாகள் எல்லா வகைகளிலும் முயற்சிகளை மேற்கொளல் வேண்டும்'' என்று நமக்கு எடுத்துரைத்து, வேத உபநிஷத்துக்களின் சிறப்பினை உணர்த்த ஓர் அன்னிபெஸணட் இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு வரவேண்டிய சூழ்நிலையில் நாம் இருக்கிறோம்.

வேத உபநிஷத்துக்கள் தோன்றிய இப்பாரதத்தில் வாழும் நாம் வெகு காலமாகவே வேத கல்வி பற்றிய அவசியத்தையும் அவசரத்தையும் உணர மறந்துவிட்டோம். ஏனெனின் சுமார் ஆறேழு நூற்றாண்டுகளாகவே, முதலில் முகமதியர்களாலும், பின்னர் ஆங்கிலேயர்களாலும் ஆளப்பட்டு வந்தோம். சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்பு 'மெக்காலே' யால் கொண்டு வரப்பட்ட புதிய கல்விச் சீரமைப்புத் திட்டம் நமது குருகுலவாசம் போன்ற இந்தியக் கல்வி முறைகளுக்கு ஒரு சமாதி கட்டிவிட்டதோ எனக் கருதவேண்டியுள்ளது. சிறிது சிறிதாக, இந்தியனின் அன்றாட வாழ்க்கை ஓட்டத்திற்கு ஆங்கிலம் ஒரு தேவையாக அமைந்துவிட்டது. ஆம், இம் மாற்றத்தினல், வேதம் மற்றும் வடமொழி கற்ற அறிஞர்கள் ஒரேடியாக நிலைகுலைந்தனர் என்றே கூறவேண்டும். இன்று வேதத்தில் கல்வி பெற்ற ஒரு பிராமண வகுப்பைச் சார்ந்த ஒருவருக்கு திருமணவாழ்க்கை அவ்வளவு எளிதாக அமைந்து விடுவதில்லை என்பதை நான் கேள்விப்பட்டேன். இந்நிலை மிகவும் வருந்தத்தக்க ஒன்றாகும்.

ஆகவே இச்சூழ்நிலையில், நவீன கல்வித் திட்டங்களால் நம்முடைய பண்டைய வேத உபநிஷத்துக்களின் பெருமை மஙகாவண்ணம், அவற்றினைப் பாதுகாத்து, அவற்றைக் கற்கும் நபாகளை உற்சாகமூட்ட வேண்டியதன் அவசியத்தை இன்று அவசரமாக நினைத்துப் பார்க்கும் நிலையில் இருக்கிறோம். ஒவ்வொரு ஆண்டும் படித்தவர்களிடையே வேலையில்லாப் பிரச்சனை பெருகிக் கொணடே வரும் இச்சமயத்து, கல்விக்காக ஆண்டொன்றுக்கு கோடிக்கணக்கான ரூபாய் செலவழித்துவரும் இத்தருணத்து. பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும் அன்றாடம் நடைபெறும் கிளர்ச்சிகள், வன்முறைகள் நமக்கு ஒரு பெருத்த தலைவலியாக விளங்குகின்றன. ஆகவே பதவி ஆசைக்கோ, அதிகார மமதைககோ வழிகாட்டாது, இந்திய ஆன்மிகக் களஞ்சியமாக விளங்கும் வேத கலாசாரத்திற்கு உயர்வளிக்கும் கல்வித் திட்டங்களுக்கு ஊக்கமளிக்கப்படல் வேண்டும்.

இம்முயற்சியின் முதற் பணியாக, வேதரக்ஷண திட்டம் ஒன்றும், குமார அத்யாயண திட்டம் ஒன்றும் மேற்கொள்ளப்பட உள்ளன. இவற்றிற்கெல்லாம் உதவும் ஸ்ரீ வேங்கடேஸ்வரரின அருட்திறமையை எணணி மகிழ்வோம். நாத்திகர்களின் கூக்குரலுக்குப் பதிலளிக்கும் வகையில் ''இறைவன் இருக்கின்றான்'' என்ற பேருண்மையை எடுத்துக் காட்ட ஓர் சாதனமாக விளங்கும் வேதம் சம்பந்தப்பட்ட கல்வித் திட்டங்களை ஊக்குவிக்கும் விதத்தில் நமக்கு வழி காட்டத்தான் ஸ்ரீ வேங்கடேஸ்வரர் தனது வருமானத்தை வருடந்தோறும் பெருக்கிக் கொண்டே போகிறார் போலும். இந்து மேம்பாட்டின் அவசியத்தை உணர்ந்துதான், நமது மாநில முதல்வர் கோயில் வருமானத்தில் 10 சதவீதம் இந்து சமயத் திட்டங்களுக்காகச் செலவழிக்கப்படல் வேண்டும் கூறினர். அப்பத்து சதவீதத்தில், பெரும்பகுதி, மறைந்துவரும் நமது சாஸ்திரங்களை கற்பதற்கும், வேத உபநிஷத்துக்கள் சம்பந்தப்பட்ட திட்டங்களுக்கும் ஒதுக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன். சாஸ்திரங்கள் அல்லது வேதங்களைக் காக்கும் திட்ட வளர்ச்சியில் நாம் இன்று ஈடுபாடு காட்டாமற் போனல், பின்னர் எவ்வகையாலுமம அவற்றின் பெருமையை உலகிற்கு உணர்த்தாமற் போகும் சூழ்நிலை ஏற்படும் என்பது உறுதி. ஒரு முறை இவ்வாய்ப்பினை நாம் இழநதோமானல், இறுதி வரை அவறறினை இழந்தவர்களாவோம். சாமவேதத்தின் பல சாகைகள் இன்று வழக்கத்திலிருந்து மறைந்துவிட்டன. அதர்வ வேதத்தின் நிலை இன்று அரை உயிராய் இருந்து வருகிறது.

பல மேல் நாட்டுஇளைஞர்கள், குறிப்பாக ஹாலந்து, டென்மார்க், நெதர்லாந்து போன்ற நாடுகளைச் சார்ந்த மாணவர்கள் வேதங்களில் ஆராய்ச்சி செய்து, அதில் டாக்டர் பட்டங்களும் பெற்றுவருவதாகக் கேள்விப்படுகிறோம். 'கிருஷ்ண' பக்தி இயக்கத்தைச் சார்ந்த சந்நியாசிகளும். பிரம்மசாரிகளும் இந்து சமயத்தின் மேல் காட்டும் ஈடுபாடு ஆர்வம் நம்மையே சிந்திக்கவைக்கின்றது. இவையாவும், இந்தியாவிலிருந்தே வேத கலாசாரத்தின் மையம் மாற்றப்பட்டுவிட்டதோ என நினைக்கும்படி அமைந்துள்ளன. இந்தியாவில் இன்றுள்ள வேதங்களில் நன்கு தேர்ச்சிப் பெற்ற அறிஞர்களை விரல் விட்டு எண்ணிவிடக்கூடிய நிலையில் அவர்கள் எண்ணிக்கை உள்ளது. அவாகளில் பெரும்பாலோர் நம்மால் மறக்கப்பட்டு, வறுமைக் கோலம் பூண்டு, அன்றாட வாழ்க்கைக்காக அறக்கட்டளைகளின் மேல் ஆதாரப்பட்டு இருக்கின்றனர். ஆகவே இந்நிலை மாற்றப்பட்டு, வேத சாஸ்திரங்களின் அருமை மீண்டும் உயிர்ப்பெற்று, இந்திய மண்ணின் பழம் பெருமை ஒளிர்விடும் வகையில் முயற்சிகள் பலவற்றை மேற்கொள்ளப்பட வேண்டிய அவசர நிலையில் நாம் இன்று இருக்கிறோம்.

ஜெய் ஹிந்த்

(தமிழாக்கம்: உமாராம்)

# ஸ்ரீ தீபப் பிரகாசப் பெருமாள்

*'ஸ்ரீ தீபப் பிரகாசராய் நின்று அறியாமை என்னும் இருள் அகலவும், மெய் ஞானம் என்னும் ஒளி ஓங்கவும், இத்தலத்தில் (தண்கா)' எழுந்தருளி இருக்கிறாய்! தீபப் பிரகாசப் பெருமாளாய் உலகை உய்விக்கும் உன்னை விட உற்ற தெய்வம் பிரிதொன்றுண்டோ? எனக்கு நீயே கதி; மகாலட்சுமி என்றும் இனிதிருநது உறையும் உன்னை நான் சரண் அடைகிறேன்!'*

*(சரணாகதி சுலோகத்தில் ஸ்ரீ தூப்புல் வேதாந்த தேசிகர்.)*

## காஞ்சியை நோக்கி...!

பூமண்டலத்தைப் படைத்து வந்த பிரமதேவன், தன்னிலையில் மனம் கலங்கி நிற்கிறான், ஒரு கணம்! பின் பீடு பெற்று உயர்வடைய—வாணியால் அபகரிக்கப்பட்ட சிருஷ்டி தண்டத்தைப் பெற திருமாலை நினைந்து அருந்தவம் செய்கிறான். வாட்ட முற்ற அவன், வானொலி கேட்டு வகையறியா உவகை மிகக் கொண்டு வருகிறான்.

## 'சத்திய விரத சேத்திரமாகிய காஞ்சி'

இங்கே தபோவனர்கள் சூழ்ந்த திருவனந்த சரஸையும், திருவத்தி மாமலையையும் கண்டு உவக்கிறான், பிரமன். அத்திகிரியை நாற் சதுரமாக்கி, அதன் அருகில் அசுவமேத யாக சாலையை அமைத்து, புனித வேள்வியைச் செய்யத் தொடங்குகிறான்.

'திசை முகனே! உனது தரும பத்தினியாகிய வாணியின்றி வேள்வியை இயற்றுதல் தகாது; தக்கவாறு கூறி, பிணக் கொழித்து அவளை அழைத்து வருவாயாக!'—என்று மொழிந்த பிரகஸ்பதியின் வார்த்தையைக் கேட்ட பிரமன், அருகிலிருக்கும் வசிட்ட முனிவரை நோக்குகிறான். அவரோ சரசுவதி தீர்த்தத்திற்கு விரைந்து வாணியை வணங்கிப் பலபட பாராட்டிப் போற்றி, வேள்விக்கு வருகவென வேண்டி நிற்கிறார் ஊஹூம்.. தேவியின் பிணக்கு நீங்கவில்லையே!

## வாணியின் மாயா சக்தி

சோர்ந்த உள்ளத்தோடு திரும்புகிறார் வசிட்டர். அதனால் சாவித்திரி முதலிய பிரமனைவியர்களோடு வேள்விக்குரிய திட்சையைப் பெறுகிறான் பிரமன். அச்சமயம் எழுந்த மகிழ்ச்சி ஆரவாரம் வானை முட்டுகிறது. தேவர்கள் பூமாரி பொழிகிறார்கள். அது கண்ட அசுரர்கள் சும்மா இருப்பார்களோ? அழுக்காறு கொண்ட நெஞ்சினர்களாய் அங்கிருந்து வெளியேறி வாணியைச் சரண் அடைகிறார்கள்.

புலவர். சி. ஈ. எஸ். பெருமாள்,
காஞ்சிபுரம்.

'தீமதி கொண்டோரால் தூண்டி விடப்பட்ட உமது கணவன், முதல் மனைவியாகிய உன்னை நீத்து, அநீதியான முறையில் யாகம் செய்கிறானே! பொறுக்கலாற்றாது திரும்பி விட்டோம் அம்மா, நாங்கள்!'—என்றவர்கள் புகன்றபோது, வெடிக்கும் எரிமலையாய்த் துடித்து எழுகிறாள் தேவி. நெஞ்சம் துடிக்கிறது. கண்கள் கோபக் கனலைக் கக்குகின்றன. தகாத வேள்வியை தானே அழித்திட முனைகிறாள். தனது மாயா சக்தியினால் அக்கினி உருவமான மாயா அனலனை உண்டாக்கி அனுப்பி விடுகிறாள், வாணி! அவ்வளவுதான்! எங்கும் ஒரே கோர இருள், பயங்கரமாகப் படர்கிறது. மையிருளின் கொடிய தாண்டவத்தைக் கண்டவர்கள், விதிர் விதிர்ப்பெய்தி விரைந்தோடி, ஒளிகிறார்கள்.

## திருத்தண் காவில்...!

செய்வதொன்றும் தோன்றாத நிலையில் நான்முகன், உள்ள முருகி ஸ்ரீமந் நாராயணனைத் தொழுது ஏத்துகிறான். உவகையால் உள்ளம் பூரித்த திருமால் அவ்வேள்வித் தீயினின்று தேஜோ மயமான தீபப் பிரகாசராய்-விளக்கொளி எம்பெருமானாராய்—சித்திரை ரேவதியில் ஆவிர்பவித்து மாயா அனலனை ஒரு கையில் தீபம் போல் ஏந்திய நிலையில், தீபப் பிரகாசராய்த் திருக்காட்சி நல்கும் இப்புனித இடமே, 'திருத் தண்கா' என்று போற்றப் பெறும் திவ்விய தேசம் ஆகும்.

## தீபப் பிரகாசப் பெருமாள்

சத்திய விரத சேத்திரமாகிய காஞ்சியில் வேகவதி நதி தீரத்தில் திருத்தண்காவில் எழுந்தருளிய திருமாலின் திருநாமம்: விளக்கொளிப் பெருமாள். ஸ்ரீதேவி பூதேவியர்களோடு நின்ற திருக்கோலம்: காஞ்சியிலுள்ள மற்ற திவ்விய தேசங்களில் காண்பதரிது. மேற்கு திருமுக மண்டலம். பிரமாவுக்கு பிரத்தியட்சம். சங்கு சக்கரம், அபயம், கடி அஸ்தம் கொண்ட எழில் கொழிக்கும் திருக்கோலம், எவரையும் தன்பால் ஈர்க்கும் தன்மையது ஆகும். தாயார் திருநாமம்: மரகத வல்லித் தாயார். தாயாருக்கும் ஆண்டாளுக்கும் தனித் தனிச் சந்நிதிகள். இலட்சுமி புட்கரணி; சரஸ்வதி தீர்த்தம்.

## கோயில் கட்டட அமைப்பும் விழாவும்

தீபப் பிரகாசரின் மூன்று நிலையுள்ள எளிய கோபுரம், முதலில் நம்மை வரவேற்கிறது. துவஜஸ்தம்பத்தைத் தாண்டி வலப்புறம் சென்றால், ஆண்டாள் சந்நிதி. மூன்று பிரகார அமைப்

புடைய இக்கோயில் மகா மண்டபத்தில், தூண்களில் கண்களைக் கவரும் சிற்ப நுட்பங்கள் இல்லை; எனினும், நெஞ்சுக்கு இதமான—மனோரஞ்சிதமான அமைதியை நிலவச் செய்கிறது. இங்குள்ள அர்த்த மண்டபத்தில், அனந்தாழ்வார், சேனை முதலியார், நாத முனிகள், நம்மாழ்வார், கலியன், ஆளவந்தார், இராமானுசர் முதலானோர் சிலா ரூபத்தில் எழுந்தருளியுள்ளனர். திருமால், ஸ்ரீதேவி, பூதேவி, கண்ணன், சக்கரத் தாழ்வார். ஆண்டாள் உற்சவ மூர்த்தங்களும் உண்டு. தாயார் சந்நிதி மகா மண்டபம், பிற்கால பாணி அமைப்பு. இங்குள்ள தூண்களில் நடன நங்கையர், திருமால், இலட்சுமி மற்றும் திருப்பணி செய்தவருடைய திருவுருவச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

திருமால் அவதார நட்சத்திரத் (சித்திரை ரேவதி)தில் உற்சவம் ஆரம்பம். ஆவணி கடைசி திருவோணத்தில் பெருமாளும் தூப்புல் தேசிகனும் ஸ்ரீவரதர் கோபுர தரிசனம் கண்டு, மாட வீதியை வலம் வந்து திரும்புவர். புரட்டாசியில் சாற்றுமுறை கழித்த மறுநாளும், தைமாத பொங்கல் நாளும், இவ்வாறே புறப்பாடும் ஸ்ரீ வரதரை வலம் வருதலும் நடைபெறும்.

மார்கழியில் வைகுண்ட ஏகாதசி உற்சவம் உண்டு.

## ஆழ்வார்கள் பரவிய திருவிடம்

இப்பெருமானையும் பெருமாட்டியையும் நம்மாழ்வாரும் திருமங்கை ஆழ்வாரும் தெள்ளு தமிழ்ச் சொட்டும் தேன் பாசுரங்களால் மங்களாசாசனம் செய்திருக்கிறார்கள். திருமங்கை ஆழ்வார் தமது திருநெடுந்தாண்டகத்தில்,

'மின்னுருவாய் முன்னுருவில்
வேதம் நான்காய,
விளக் கொளியாய் முளைத்தெழுந்த
திங்கள் தானாய்,
பின்னுருவாய் முன்னுருவில்
பிணிமூப் பில்லாப்
பிறப்பிலியாய் இறப்பதற்கே
எண்ணாது எண்ணும்

பொன்னுருவாய் மணியுருவில்
பூதம் ஐந்தாய்ப்
புனலுருவாய் அனலுருவில்
திகழும் ஜோதி
தன்னுருவாய் என்னுருவில்
நின்ற எந்தை
தளிர்புரையும் திருவடி என்
தலைமே லகவே!'

என்று முதலில் வைத்துப் பாடியவர்; மேலும் மனமுருகிப் பாடுகிறார், பாருங்கள்:

'மூளைக்கதிரைக் குறுங்குடியுள்
முகிலை மூவா
மூவுலகும் கடந்தப் பால்
முதலாய் நின்ற
அளப்பரிய ஆரமுதை
அரங்கம் மேய
அந்தணனை அநதணர்தம்
சிந்தை யானை
விளக்கொளியை மரகத்தை

திருத்தண் காவில்
வெஃ காவில் திருமாலைப்
பாடக் கேட்டு
வளர்த்ததினால் பயன் பெற்றேன்;
வருக வென்று
மடக்கிளியைக் கைகூப்பி
வணங்கி னாளே!'

திருமங்கையாழ்வார் இப்பாசுரத்தில் தமது மன நலம் பொங்க—கவி நலம் தோன்ற—'விளக்கொளியை, மரகத்தைத் திருத்தண் காவில்' என்று எம்பெருமானையும் எம்பெருமாட்டியையும் சேர்த்துப் பாடியிருப்பது குறிப்பிடத் தக்கது. இதனால், விளக்கே திருமால் என்றும், விளக்கொளியே தாயார் என்றும் கொண்டு பாசுரத்தின் மெய்ப் பொருளை உய்த்துணர்ந்து அனுபவிக்க முடிகிறது அல்லவா!

## தூப்புல் ஸ்ரீதேசிகர் அவதாரத் தலம்

தூப்புல் வேதாந்த தேசிகர் (கி.பி. 1268–1370) அவதாரம் செய்ததும் இத் திவ்விய தேசத்திலே யாகும். து—பரிசுத்தம்; தூய்மை. புல்—தருப்பைக் காடு. பரிசுத்தமும் புனிதமும் உள்ள புல் நிறைந்த இடத்தில் தோன்றியவர் என்பது பொருள்: புரட்டாசி திருவோணம் உதயம். கண்டை மணி அம்சம். இப்பெருமாள் மீது இவர் பாடிய சரணாகதி சுலோகம், கரையாத கல்நெஞ்சையும் பாகாய் உருக்கும் பாங்குடையது எனலாம்.

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.



# எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. கே. ராகவாச்சாரி,
நியூஸ் ஏஜெண்ட்,
ரமணி ஸ்டோர்ஸ், கும்பகோணம்.

திரு. வி. வி. ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம் சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, முராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன.

திரு எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே.ஆர். மொஹல்லா (அஞ்சல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாநத ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன் [கோயில் வீதி.
19–வது பிளாக்
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார்,
c/o N. கோதண்டராமன், கனரா
பேங்க், 25, நந்தி கோயில் தெரு,
தெப்பக்குளம், திருச்சி-2.

திரு. வாசு வெங்கடேஸ்வரன்,
ஸ்ரீ கண்ணன் ஸ்டோர்ஸ்,
மெயின்பஜார், எம். ரெட்டிபட்டி,
(via) அருப்புக்கோட்டை.

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹீம், பம்பாய்-16.

திருமதி.ஏ.வனஜாகிருஷ்ணமூர்த்தி,
46, பழனியாண்டவர்கோயில்தெரு,
களஞ்சியம ஏஜென்ஸீஸ்,
கொஸபாளையம், ஆரணி-1.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட், ஜெய்பூர் (P.O.)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸ்டோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்புத்தூர்-18

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம்.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்ப்பேட்டை.

திரு. ஏ. அருணாசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு.எஸ்.என்.கிருஷ்ணய்யாசர்மா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. கே. எஸ். கோதண்ட
ராமய்யா, M.A., B.O.L,.,B.T.,
ஓசூர். தர்மபுரி மாவட்டம்.

திரு. பி. விஜயேந்திரா,
நியூஸ் ஏகஜண்ட், நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள் [வீதி,
தஞ்சாவூர்.

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபைய்யா பேட்டை, சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ.பி.

திரு. வி. ஆறுமுகம்,
பழைய இரும்பு வியாபாரம்,
72. காந்தி மார்க்கட்,
பொள்ளாச்சி–642001.

திரு. ஏ. கே. சுப்ரமண்யம்,
நியூஸ் ஏஜெண்ட்,
பாகாலா (அஞ்சல்)

திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சிரௌதிகள்
74, ஏ, கிழக்கு முதல் தெருவு,
மன்னார்குடி-614001.

திரு. ஏ. முனுசாமி கௌடா,
ஓல்டு போஸ்ட் ஆபீஸ் ரோடு,
முலபாகல், கோலார் மாவட்டம்.

திரு. டி. சீனுவாஸாசார்யா,
4, சௌந்தரம்மாள் வீதி,
லட்சுமிபுரம்,
குரோம் பேட்டை, சென்னை-44.

திரு. எஸ். நாகராஜகுப்தா,
நியூஸ் ஏஜண்ட் & ஜெனரல் [மர்ச்சண்ட,
கிழக்கு பஸ் நிலையம்,
சித்தரதுர்க்கா.

திரு. வி. திருவேங்கடம் நாயுடு,
73, காளிமுத்து பிள்ளை லேன்,
திண்டுக்கல்.

திரு. ஏ. என. கிருஷ்ணமூர்த்தி,
157, கார்டன் ஏரியா,
ஷிமோகா.

திரு. பி. ராமமோஹன மூர்த்தி,
28-88 ராமேஸ்வரம் அக்ரஹாரம்,
புரதொட்டூர்,
கடப்பை ஜில்லா.

திரு. வி. ஜே. ஜனார்தனன்,
11, புஜங்கராவ் வீதி,
சாலவன் பேட், வேலூர்.

திரு. ஆர். வெங்கடேசன்,
68, தெற்கு மாடவீதி,
திருவொற்றியூர், சென்னை-19.

கேப்டன்: டி. இ. என். சாரி, பி.ஏ.
16, ஜி. எஸ். டி. ரோடு,
செங்கற்பட்டு–603001.

திரு. கே. ஆர். பாஸ்கர் செட்டி,
22/110, மெயின் தெரு, குண்டக்கல்
அனந்தப்பூர் மாவட்டம்
ஆ. பி. (P.O.)

திரு. வி. லக்ஷ்மி நாராயண செட்டி [யார்
மளிகை, பஜார் தெரு,
இடப்பாடி, சேலம் மாவட்டம்.

திரு. எம். வீரபாகு,
19, தெற்கு ரத வீதி,
ஆழ்வார் திருநகரி, தமிழ் நாடு.

திரு. எஸ். ஜகன்னாதன்,
17-3-1/5 சுந்தரய்யர் வீதி,
சித்தூர். (ஆ. பி.)

திரு. பி. ராஜமாணிக்கம்,
1 மஹாலி அம்மன் கோயில் தெரு,
ஆனைமலை-642104.

திரு. எம். வெங்கடராம அய்யர்,
நெ. 8, தாரகேசவரர் சுவாமி வீதி,
தோட்டபாளையம், வேலூர்.

திரு. ஏ. கணபதி பிள்ளை,
ஸ்டாம்ப் வெண்டார்,
அறகண்ட நல்லூர்–605752.

திருமதி. எஸ். சீதாலக்ஷ்மி,
1, ஜவுளிக்கார தெருவு,
திருவாரூர்–610001.

திரு. எம். வீரபாகு
19, தெற்கு ரத வீதி,
ஆழ்வார் திருநகரி-628612.

## எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

| | | |
|---|---|---|
| திரு. என். வாசுதேவ பிரபு,<br>10-58, அமராவதி,<br>கொச்சின்-1. | திரு. ஏ. ஸ்ரீநிவாஸாசார்யா,<br>5-5-34 சிவாலயம் வீதி,<br>கரீம் நகர். ஆ. பி. | திரு. வை. முகந்தராவ்,<br>பிளாக் நெ. 10-391,<br>மங்களவார் பேட், பூனா-1. |
| திரு. ஸ்ரீராமன் ஏஜென்ஸி,<br>13. வடக்கு ஈஸ்வரன் கோயில் [தெரு,<br>ஃபோர்ட், ஈரோடு-1. | திரு.இ. எஸ். வி. ஜகன்னாத ராவ்,<br>டெலிபோன் ஆபரேட்டர்,<br>எஸ். இ. இரயில்வே, பிலாய்-3. | விஜயா ஏஜன்ஸீஸ்,<br>633, ஜே. பஜார்,<br>கரூர், திருச்சி மாவட்டம். |
| ஸ்ரீமதி. ஜி. ராஜேஸ்வரி,<br>32, பிராமணர் வீதி,<br>நாடுபேட், குடியாத்தம். | திரு. கே. சேஷாத்ரி,<br>1, தாதம் வீதி,<br>ஸ்ரீரங்கம் - 620006. | திரு. கணபதிராம் & கோ.,<br>68/1, சங்கரன் கிணர் தெருவு,<br>விருதுநகர்—626001. |

மேற்குறிப்பிட்ட இடங்களல்லாது, மற்றைய நகரங்களுக்கு 'ஸப்தகிரி' ஏஜெண்ட்டுகள் தேவை. விற்பனையில் 25% கமிஷன் வழங்கப்படும். மேலும், ஏஜெண்ட்டுகள் இல்லாத இடத்திலிருந்து வரும் குறைந்தபட்சம் 5 பிரதிகள் அல்லது அதற்கு மேற்பட்ட பத்திரிகை சரக்காணைகளுக்கும் (Bulk orders) மேற்படி கமிஷன் தரப்படும்.

### கல்வெட்டுச் செய்திகள்

வைகானஸ ஆகம முறைப்படி இரு கால பூசை ஏற்று வரும் இக்கோயில், பழைமையைப் பறைசாற்றுவதாக இருக்கிறது. சோழர் காலக் கட்டட அமைப்புடன் விளங்கும் இக்கோயிலில், தமிழ், வடமொழிக் கல்வெட்டுகள் காணக்கிடக்கின்றன. பெருமாள் சந்நிதி திருவுண்ணாழிகையில் வடப் புறத்தில் மதுராந்தகப் பொத்தப்பிச் சோழன் ஆட்சிக் காலக் கல்வெட்டும், தென் புறத்தில் திரிபுவனச் சக்கர வர்த்தி கோனேரின்மை கொண்டான் காலக் கல்வெட்டும் முறையே, திருத் தண்கா பெருமாளுக்கும் வேளிக்கை ஆளரி பெருமாளுக்கும் திருவிடை யாட்டம், இலைப் பாக்கம் கிராமங் களை கோயில் திருப்பணிக்காக விடப் பட்ட நிவந்தங்கள் பற்றிய செய்தி களைக் கூறுகின்றன.

இப்பெருமாள் சந்நிதி வாயிற் சுவற்றில் ஒரு வடமொழிக் கல்வெட்டு உள்ளது. அது வருமாறு: 'ஸ்ரீபாஷ்ய அமிருதப் பிரவாகத்தால் நிறைந்த இருதய கமலத்தில், மாதவன் சதா தாண்டவமாடும் பெருமை பெற்ற வரும், காஞ்சீபுரத்திற்கே ஒரு அணி யாக விளங்குபவரும், துறவிகளுக்குள் சிறந்த வருமான அழகிய மணவாளர் நிர்மாணிக்கச் செய்த பிரகாரங்கள், மண்டபங்கள், விமானங்கள், ஆகிய வற்றிலே தீபப் பிரகாசரான ஸ்ரீ ஹரி ஜொலிக்கிறார்!'

தாயார் சந்நிதியின் வெளி வாயி லில் இன்னொரு வடமொழிக் கல் வெட்டு காணப்படுகிறது. அதன் தமி ழாக்கம் வருமாறு: 'உபய வேதாந்த தத்துவங்களின் ஞானத்தால் பூரித்து விளங்கும் அழகிய மணவாளருடைய ஆணையினால், தருமமே உருவாக விளங்கும் சங்கர தாசன் என்னும் பக்தன், காஞ்சீபுரத்தில் ஜெகன் மாதாவாகிய இலட்சுமியாம் ஸ்ரீமரகத வல்லி இருந்து ஒளிவீச ஒரு மண்டபம் எழுப்பினான்!'

மேலும், கோதண்ட பட்டி என் னும் சுவாமிகள் தமது சீடர்களான நாட்டுக் கோட்டைச் செட்டிமார் களைக் கொண்டு, பெருமாள், தாயார் சந்நிதிகளுக்குத் திருப்பணிகள் செய் வித்ததாகவும், தேசாந்திரி கட் டளையை பெருமாள் நிவேதன ஏற் பாட்டுக்கு சில கிராமங்களை அளிக்கச் செய்ததாகவும் ஒரு செய்தி கூறுகிறது.

### மங்கள உரை

இவ்வாறு ஆழ்வார்களாலும் அரசப் பெரு மக்களாலும் போற்றிப் பாராட் டப் பெற்று, திருப்பணிகளும் செய் விக்கப் பெற்ற நிலையில் இவ்வுலகை உய்வித்து அருளொளி பாய்ச்சி வரும் ஸ்ரீ மரகத வல்லி உடனுகிய ஸ்ரீ தீபப் பிரகாச பெருமாளை, இந்நன்னாளில் உள்ளன்போடு நினைந்து வாயார வாழ்த்தி வழிபட்டு மனோரஞ்சிதமான வாழ்வைப் பெற்று உய்வோமாக!



# கண்ணா குழலூது

உ. கோ. ஆஷாதேவி, ஈரோடு.

என்மனச் சோலையின் அரும்புகள்மலர
என்றன் கண்ணா குழலூது
என்மனக் கிளியின் மொழிகள் வளர
என்றன் கண்ணா குழலூது
என்மனக் கல்லும் கசிந்தே உருக
என்றன் கண்ணா குழலூது
என்மனக் காவியம் எழிலாய்ப் பொலிய
என்றன் கண்ணா குழலூது.

பண்பாம் பயிர்கள் செழித்தோங் கிடவே
பண்ணை இழைத்துக் குழலூது
நண்பாய் வருவேன் நலம்பெற் றிடவே
நன்னர் இசையில் குழலூது
அண்மிய நிலையில் வந்தேன் என்பதை
அறிவுறுத் திடவே குழலூது
எண்ணிய எண்ணம் எழிலாய்ப் பொலிய
என்றும் என்றும் குழலூது.

பொல்லாக் குறும்புகள் புணர்ந்திடு குறுநகை
பொள்ளென விரியக் குழலூது
அல்லும் பகலும் அன்பின் பெயரால்
அழகிட நீயும் குழலூது
சொல்லும் பொருளும் சொல்லாச் செல்லும்
சொல்லியே நீயும் குழலூது
மெல்லப் பிணையும் பிணைப்பிலே நெஞ்சம்
மௌனமாய் மலரக் குழலூது.

கொள்ளாச் சுகத்தை கொள்ளெனக் கூறி
கொள்ளை எழிலாய்க் குழலூது
வெள்ளம் போல ஆசையில் உள்ளம்
விம்மிப் பொருமக் குழலூது
கள்ளத் தனமாய்த் துள்ளும் மனதை
கடிந்திடச் செய்யக் குழலூது
பள்ளம் நோக்கிப் பாயும் நீர்போல
பார்ப்பேன் உன்னைக் குழலூது.

நெஞ்சக் கோயிலில் கோல மிழைப்பேன்
நன்றாய் உளதெனக் குழலூது
அஞ்சும் நிலையை அழித்து உன்றனை
அடைந்தேன் அன்பா குழலூது
எஞ்சும் நாளும் எந்தன் நினைவை
ஏற்பே னென்று குழலூது
செஞ்சொல் கவியால் சித்தம் மகிழ்ந்து
சேர்ந்திடு வாயெனக் குழலூது.



இழைபல இழைந்த இதயத் தழகை
இதயத் தெண்ணிக் குழலூது
விழையுளக் காவில் விரிந்த பாவில்
விளைந்த இன்பில் குழலூது
அழைத்திடு மென்றன் அன்பாம் விருந்தில்
அருஞ்சுவை ஒன்றில் குழலூது
பிழைத்திட எந்தன் பிழைகளும் போகி
பித்தாய் வருவேன் குழலூது.

துயிலினைத் துறந்த தோகையின் விழிகள்
தூங்கிட கண்ணா குழலூது
அயலாரை மறநது அன்பில் மயக்கில்
ஆடிட நானும் குழலூது
செயலினைத் துறந்து சித்தம் களித்து
செய்திடும் வண்ணங் குழலூது
மையலார் மனத்தில் மோகத்தை மூட்ட
மேலும் மேலும் குழலூது.

சோலை மலராய் சுந்தரப் புன்னகை
சொருசாய் மலர்ந்திடக் குழலூது
காலம் மறந்து கரைந்து கசிந்திட
கண்ணா கண்ணா குழலூது
ஓலம் செயயும் உள்ளக் கடலை
ஒருவழிப் படுத்த குழலூது
ஞாலம் என்செய்யும் நானே வருவேன்
ஞானம் தரவே குழலூது

விள்ளற கரிதாம் வேதனை பலவும்
விடைபெற் றோடக் குழலூது
தள்ளற் கியலா தாபமும் வேகமும்
தணிநதே அடங்கிடக் குழலூது
துள்ளலைச செய்யும் துணிவுடை நெஞ்சைத்
தூணடியே நீயும குழலூது
எள்ளற் குரிய அறிவிலி இருளும்
எழுந்தே ஓடக் குழலூது

செனமம் எடுத்தேன கணணா கணணா
செய்பய னுற்றிடக குழலூது
கர்மம் முடிப்பேன் கண்ணா கணணா
காரியப் பயனுய்க் குழலூது
வன்மம் மனத்தில களையென இல்லை
வளம்பெற நீயும குழலூது
உன்மய மானேன் உன்னையே நினைத்து
உருகிட உவந்து குழலூது

மலரும் நெஞ்சம் மலரும் மலரும்
மணத்தைத் தரவே குழலூது
அலரும் காயாய் கனியாய் மாறி
அர்ப்பண மாக்கக் குழலூது
சிலநாள் வாழ்வில சிநதையை உன்பால்
சேர்த்திடச் சொல்லிக் குழலூது
இலநாள் இனியும் இங்கினி மேலே
இன்றே வாவெனக் குழலூது.

இரவின் இதயம் சோர்ந்தே அழுதிட
இரங்கிப் பாடுவன் குழலூது
இரவியின் வரவில் எழுந்தே நிற்பேன்
இன்பப் பண்ணால் குழலூது

கரவிலை நெஞ்சில் காரிருள் வண்ணா
கருமமும் நீயெனக் குழலூது
அரவமும் அன்பின் அரவமும் அனைத்தும்
அழகுறை நீயாம் குழலூது.

போதையும் மிகவாய்த் தலைக்கேறியதனால்
புலம்பற நீயும குழலூது
பேதையின் மனதில் பிரிவின் தாகம்
பொறுத்திட நீயும் குழலூது
வாதையும நீதியோ? வந்தணைத் திடவே
வரவைக் கூறிக் குழலூது
கோதையும் பிழைத்துப் போயிட மெல்ல
குலவும் மொழியால் குழலூது

விடுகதிர் நோக்கி விரிதா மரைபோல்
விளங்கிடு மெனக்காய்க் குழலூது
படுதுயர் போதும் பார்த்தும கணக்காய்
பழகிய இதழால் குழலூது
எடுத்திடு என்றன் உயிரை உனக்காய்
எடுத்திட இன்றே குழலூது
தொடுததிடும் மாலை வாடிடும் முன்னே
தந்திட வரவெனக குழலூது

என்பும் உருகி இளைத்திடும் வண்ணம்
எனபால் வந்து குழலூது
அனபின் பெருக்கை அள்ளிக் குடிக்க
அன்பின் பண்ணால் குழலூது
என்மனை வாசம் திறநதே வைப்பேன்
என்றும் வருகெனக் குழலூது
உன்வர வொன்றே உனதினி ஆசை
உணர்ந்து உணாந்து குழலூது

தன்மனப் பகையைத் தினமும வெல்லும
தநதிரம் கூறியே குழலூது
பின்னுள பொய்மை சிறுமை புதைநதிட
பன்னிப் பலமுறை குழலூது
என்னுள வானம் மழையைப் பொழிய
எடுத்தே நீயும் குழலூது
கன்னுள மெல்லாம் கரைந்தே கசிந்திட
கணணா கண்ணா குழலூது.



# வேதமும் வைதிக சமயங்களும்

பண்டைப் பாரதம் பல சமயங்களைப் போற்றி வருவது கண கூடு. அவை யாவும் வேதங்களை உடன் பட்டு நடப்பனவும், மறுத்து நடப்பனவும் என இருவகையின் பாற்படும். அவற்றை முறையே அகச்சமயமென்றும், புறச் சமயமென்றும் செந்தமிழ் நாட்டுச் சைவ நூல்கள் பகரும். வேதம் கரும காண்டம், ஞான காண்டம் என்னும் இரு பகுதிகளைக் கொண்டது. உபாசன காண்டம் என இடையில் ஒன்றும் கூறப்படுவதுண்டு. கரும காண்டம் முதற்பகுதியாதலின் அதனைப் பூர்வ பாகமெனவும், ஞான காண்டம் பிற்பகுதியாதலின் அதனை உத்தர பாகமெனவும் கூறுவர். கரும காணடத்துள் பல வகை தெய்வங்களும், அவற்றை வழிபடும் முறைகளும், அவற்றிற்குரிய தோத்திரங்களும் கூறப்படுகின்றன. வேதத்தில் காணப்படும் வழிபாடுகள் அனைத்தும் அக்னி மூலமாக ஆகுதிகளைத் தேவர்களுக்குத் தரும் யக்ஞம் அல்லது யாகம் என்கிற வேள்விகளையே முதன்மையாகக் கொண்டவை. ஏனைய யாவும் அவ் வேள்விகளுக்கு அஙகமாய்ச செய்யப்படுவன. வேள்விகள் பலவும் உலக நலம் கருதியே செய்யப்படுவனவாயினும் சில தனிப்பட்டவர் நலம் கருதியும் செய்யப்படுவதுணடு. சான்றுகப் பண்டை அரசர்களால் செய்யப்பட்ட பல யாகங்களை வரலாறுகள் தெரிவிக்கின்றன. அதனுல் அப்பயன்கள்பற்றி வேள்விகளும் பலவேறு வகையாகச் சொல்லப்படும். இன்னேரன்ன செய்திகளால் வேதத்தின் பூர்வ பாகம் பொதுவாகத் தெய்வ நமபிக்கையும், சுவர்க்கம், நரகம், மறுபிறப்பு என்பனவற்றை உள்ளன எனத் தெளிந்து கொள்ளும் கொள்கைகளையும் புலப்படுத்தும்.

உத்தர பாகமாகிய ஞான காண்டத்தில் தத்துவ ஆராய்ச்சி சிறிது செய்யப்படுகிறது. அப்பகுதிகள் ஆரண்யகங்கள், உபநிடதங்கள் என்னும் பெயர்களையுடையன. ஞான காணடத்தின் சிறப்புயாதெனின் கருமகாண்டத்துள் சொல்லப்படும் தெய்வங்கள் பலவும் மேலான ஒரு பரமபொருளின் வழி நடப்பனவே எனறும், அப்பரம் பொருளை யுணர்தலே ஞானம்; அதனை யுணராத வரையில் பிறவி நீங்காது; அதனை யுணர்ந்து அதனேடு ஒன்றுபடுதலே பிறப்பு நீங்கி வீடு பெறுதலாகும் என்றும் கூறுவதேயாகும். எனவே ஞான காண்டம் ஒன்றே உண்மைக் கடவுள் கொள்கையையும், வீடு பேற்றின்கண் அவாவையும், தத்துவ ஆராய்ச்சி செய்யும் மனவெழுச்சியையும தரும் என்பது போதரும். ஞான காண்டம் 'பரம்பொருள் ஒன்றே உள்ளது. அதன் வழியே உலகம் இயங்குகிறது' என்று கூறுதலைப் பலர் அதன் மேன்மை நோக்கி மேற்கொண்டு போற்றியும், சிலர் கரும காண்டத்தின் மேல் உள்ள பற்றினுல் அதனை மேற்கொள்ளாது புறக்கணித்தும நிற்பாராயினர். அவர்களில் ஞான காணடத்தைப் போற்றி நிற்போர் தத்தமக்கு விருப்பமான தெய்வத்தையே பரம்பொருளாகக் கொண்டு வழிபட்டும் ஏனைய தெய்வங்களைப் பொதுவாக வழிபட்டும் வநதனர். அப்போது அவர்ககேற்ற சிறபபு நூல்களும் உளவாயின. அவை 'ஆகமங்கள்' எனவும், கரும காண்டததுள்ளும் மிகத தாழ்நத முறையைப்பற்றி எழுந்த நூலகள் 'தந்திரங்கள்' எனவும் சொல்லப்பட்டன. புராண இதிகாசங்களிற் கூறப்படுவது போன்ற கதைகள் உபநிடதம் முதலியவைகளிலும் உணடு.


விததுவான் க ஆ. மாாக்கபந்து,
காஞ்சிபுரம்.


மேற் கூறிய ஞான காண்டம் இத்துணைச சிறப்புக்களைத் தன்னகத்தே கொணடதாயினும், அதன்கண் பலர்க்கு விருப்பம் செல்லாமைக்குக் காரணம் அஃது உலகப் பயன்பற்றிப் பேசாமையேயன்றி, அதனைச் சில விடத்து மறுத்துரைப்பதுமாகும். எனவே 'வேதம்' என்னும் சொல் கரும காண்டத்திற்கே உரியதாய்விட ஞான காணடம் வேதாந்தம் என்றே பெயர் பெறுவதாயிற்று. • மேலும் 'வேதத்தின் மெய்ப்பயன் அறமே' என்று தமிழக சைவ நூல்கள் கூறுவதால வேத நெறி எனபது மேற் கூறிய கரும காண்ட ஒழுக்கத்தையே குறிக்கும் என்பது தெளிவு. வேத நெறி என்னும் பொருளையுடையதாகிய வைதிகம என்னும் சொல் கரும காண்டத்தின் வழி நடைபெறும் ஒழுக்கத்தையே குறிப்பதாகும். அவ்வைதிக நெறியைக் கடைப்பிடித் தொழுகும் சமயங்களே 'வைதிக சமயங்கள்' எனக் கூறப்படுகின்றன.

வேதமதங்கள் வேதத்தை அடிநிலையாகக் கொண்டு தத்துவக் கொள்கைகளை வகுப்பவாயின. அவற்றுள் ஒன்று வேதத்தின் பூர்வ பாகமாகிய கரும காணடமே உணமையானது. ஞான காண்டமும் அதற்கு முதலாகிய தெய்வங்களும் கற்பனை என்று சொல்லி உடம்பிற்கு வேருய் உயிர் உண்டு என்பதும், அதனுல மறுபிறப்பும் மோட்சமும் உண்டு என்பதும், உண்மை; நற்கதி, மோட்சம் என்னும் இரண்டும் அவரவர் செய்யும் கருமத்தின் வழி வருவன. அஃதாவது காமிய கருமம் நற்கதியையும், நிட்காமிய கருமம மோட்சத்தையும் தரும். ஆகையால் கருமத்தைவிட லாகாது என்று கூறும் மதமே 'மீமாம்சகமதம்' எனப்படும். இதற்குச் சிறந்த முதல் நூல் செய்தவர் ஜைமினி முனிவர். மீமாம்சக மதத்தால் ஞான காண்டத்தின் உண்மைப் பொருள் புறககணிக்கப்படுவது கண்டு வேதங்களை ஒழுங்குபடுத்தி வகுத்த வேத வியாசா ஞான காண்டத்தைப்

பற்றி ஓர் ஆராய்ச்சி நூல் செய்தார். அதுவே பிரம்ம சூத்திரம் எனப்படும். இப்பிரம்ம சூத்திரத்திற்கு உரை எழுதியவர்களே பாடியகாரர்கள் என்றும், மூன்று மதாச்சாரியர்கள் என றும் போற்றப்படுகிறுர்கள். அவர்களே சங்கரர், இராமாநுசர், ஆனந்த தீர்த்தா என்னும் மூவராவர். இவர்களில் சங்கரர் ஏகான்ம வாதம் பற்றி பிரம்ம சூத்திரத்திற்கு உரை வகுத்து அம்மதத்தை விரித்துரைக்கின்ருர். அதனைச் சுருக்கமாக ஈண்டுக் காண போம்.

ஏகான்ம வாதம் என்பது 'பரமானமா ஒன்றே உள்ளது; உடம்பு தோறும் வேறு வேருய்க் காணப்படும சீவான்மாக்கள் பலவும் நீரில் காணப்படும் சந்திரனின பிரதிபிம்பம் போன்றது. அது பரமான்மாவின் சாயையாகிய தோற்றமே தவிர உண்மையன்று. அந்நீர் ஒழிந்தால் பிரதிபிம்பம் நீங்கிச் சந்திரனேயாய் விடுதல் போல உடம்பு அழிநதால் சீவான்மா, பரமானமாவாகிவிடும். சீவான்மாவைத் தவிர உடம்பு முதலிய அனைதும் உணமையல்ல; அனைத்தும் மாயையின் தோற்றங்களே. நாம் விவேகத்தையடைய இவை பொய்யாய் ஒழிந்து மெய்ந்நிலை யடைவோம்' என்று கூறும். இதுவே அத்துவிதம் என்று போற்றப்படுகிறது. இக் கொள்கை முன்னரே உள்ளதாயினும் சங்கரர் தம் பாடியத்தால் வலியுறுத்தினா. அதனல் இதற்குச் சங்கரர் மதம் எனப் பெயர் வழங்கலாயிற்று.

ஆதி சங்கரர்க்குப் பின் வந்த இராமாநுஜர் பக்தி மார்க்கத்தில் விருப்பங் கொணடவராகையால் பாஞ்சராத்திர ஆகமத்தின் வழி நின்று சங்கரரது கொள்கையை ஒருவாறு மறுத்து விசிட்டாத்துவிதம கூறி வைணவ பாடியம் செய்தார். இவர், பரமான்மா கேவலம் அத்துவிதமன்று விசிட்டததினுல் அத்துவிதமாம்; அஃதாவது, பரமான்மா தனக்கு அந்நியமாய் வேருெரு பொருள் இல்லையாயினும் சீவான்மா, உலகம் என்பவற்றைத் தனக்கு விசேடணமாகக் கொண்டு, தான் விசிட்டப் பொருளாய் நிற்கும்' என்ருர். இதனுல் சீவான்மாவும், உலகமும் பரமான்மாவின் கூறுகள் என்பது இராமாநுஜரது கொள்கையாதல் விளங்கும். வைணவம் பற்றிய பல புதிய மரபுகளைத் தோற்றுவித்தவரும் அவரே. பைந்தமிழ் நாட்டில் தோன்றிய பன்னிரு ஆழ்வார்களின் திருமொழிகட்கு இவர் முதன்மை கொடுத்துப் போற்றினுர். இவரைத் தென்கலை வைணவர்களே 'ஆசாரியர்' என்றும் 'உடையவர்' என்றும் போற்றுகின்றனர். இவர்கள் வட மொழி, தென் மொழி இரணடையும் போற்றிக்கொள்வதால் தங்களை 'உபய வேதாந்திகள்' எனக் கூறிக் கொள்கின்றனர்.

சங்கரர், இராமாநுஜர் ஆகிய இருவர்க்கும் பின்வந்த ஆனந்த தீர்த்தர் என்னும் மத்வாச்சாரியார் பிரம்ம சூத்திரத்திற்கு ஓர் உரை வகுத்தார். இவரும் இராமாநுஜரைப் போலவே திருமாலைப் பரமபொருளாகக்கொணடு வழிபடும் பக்திமார்க்கத்தினராய் சங்கரரது ஏகான்ம வாதக் கொள்கையை அடியோடு மறுத்து 'பரமான்மாவும், சீவான்மாவும், உலகமும் வேறு வேறு தனிப் பொருள்களே அவை என்றும், ஒன்ருய் இருந்ததுமில்லை. இருககப் போவதுமில்லை. சீவான்மா, பரமான்மாவைத் தன் பக்தி மார்க்கத்தால் கண்டு இன்புற்றிருக்கும் நிலையே முக்தி' என்றும் கூறுவார். இதனுல் இவரது மதம் 'துவித மதம்' என்று சொல்லப்படுகிறது. இச்செய்திகளால் நம் பாரத நாடு பழங்காலந் தொட்டே ஆன்மிகத்துறையில் சிறந்து விளங்கிப் பல சமயங்களைத் தோற்றுவித்துச் செந்நெறிப்பட்ட சமுதாயத்தைக் கொண்டு விளங்கியது என்பது யாவரும் அறிந்த உண்மை யன்ருே? வளர்க! ஆன்மிகம்.

---

# ஓர் அறிவிப்பு

கி. பி. 15-ஆம் நூற்ருண்டைச் சார்ந்தத் தெலுஙகு இசைக கவிஞரும், அவ்வேழு மலைகளில் நின்றவண்ணம கோலம் கொண்டிருக்கும வேங்கடவனின் சிறந்த பக்தருமான ஸ்ரீ தாளளபாக்க அன்னமாச்சார்யார் அவ்நெடியோன் மீது பக்திச் சுவையும் காதற்சுவையும் மிக்குஒளிர 32,000 கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். அன்ருரின் அச்சீர்மைமிகு கீரத்தனைகளின் புகழ் எங்கும் பரவும வகையில் அக்கவிஞரின் நினைவாக, திருப்பதியில் ரூ 4 5 இலட்சம் செலவில் 'ஸ்ரீ அன்னமாச்சார்யா கலாமந்திரம்' ஒனறு கட்டப்பட்டுள்ளது. தறபோது அக்கலா மந்திரத்தில், சமயப்பற்றும் ஆன்மீகப்பற்றும் எங்கும் தழைத்தோங்கும் வகையில் நூலகம் ஒன்று திறக்கப்பட்டுள்ளது. இந்நூலகத்திறகு இந்து சமயம், புராணம் மற்றும் இந்தியக் கலாசாரம் சமபந்தப்பட்ட பததிரிகைகள், நூல்கள் பக்தர்களிடமிருந்து இலவசமாக வரவேற்கப்படுகின்றன. மக்கள சேவையே மகேசன் சேவையாகக கொண்டு, இப்புனித சேவையில் பங்கேற்று அவ்வெல்லாம் வல்ல அலர்மேல் மங்கை, உறைமாபனின் அருளைப்பெறுவீர்களாகுக!

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீமன் நாதமுனிகளும்

திரு. மா. வரதராஜன்,
திருப்பதி.

ஸ்ரீயः பதியான ஸர்வேச்வரன் உலக மக்கள் உய்யும் வகை அறிய ஓடி ஓடி பல அவதாரங்கள் எடுத்தும் திருந்தாமையாலே, மானைக் கொண்டு மானைப் பிடிப்பாரைப் போலே, உலக மக்கள் உய்யும் வகை செய்ய வேதப் பயன் கொள்ளவல்ல ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும் அவதரிக்கச் செய்தான்.

வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கான ஸர்வேச்வரனை அடைவதற்காக ஆழ்வார்கள் திவ்யப் பிரபந்தங்களை அருளிச் செய்தார்கள். சுமார் கி. பி. 9-ம் நூற்றாண்டில் தான் இத்திவ்யப் பிரபந்தத்திற்குப் புத்துணர்ச்சி ஏற்பட்டது. இப்புத்துணர்ச்சிக்குக் காரணமானவர் ஆசார்யர்களில் முதல்வரான ஸ்ரீமன் நாதமுனிகள் என்னும் மகாபுருஷர். நாவீறு படைத்த இவ்வந்தணரின் அளவிலாப் பரிவும், பக்தியும், இடையறு முயற்சியும், இத்திவ்யப் பிரபந்தம் வையமறிய வாய்ப்பைத் தநதது. ஸ்ரீமன்நாதமுனிகள்அவதாரம், நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் சீர்மையை இன்று நாம் அனுபவிக்கக் காரண

ஒரு சமயம் மன்னனுரைச் சேவிக்க வேற்று நாட்டிலிருந்து சில ஸ்ரீவைஷ்ணவர்கள் ''ஆராவமுதே'' என்கிற திருவாய்மொழியை மன்னனுர் திருமுனபேசேவிக்க, அதைக் கேட்ட நாதமுனிகள் மிகவும் பக்திமேலிட்டு, அவர்களைப் பார்த்து இப்பிரபந்தத்தின் எஞ்சியப் பகுதி எவ்விடத்தில் உள்ளது என்றும், இதற்கு ஏதாவது ஓலைச்சுவடிகள் உணடோ என்றும் வினவினுர். அவர்கள் நாதமுனிகளைப் பார்த்து, ''எங்களுக்கு இவ்வளவே தெரியும். வேறொருவரிடத்திலும் ஓலைச்சுவடி இல்லை. சடகோபன் அவதரித்த திருக்குருகூரான ஆழ்வார் திருநகரில் உண்டாக வேணும்'' என மொழிய, பின்னர் நாதமுனிகள் அவர்களுக்கு மன்னனுரின தீர்த்த ப்ரஸாதங்களைக் கொடுதது அனுப்பினுர்.

பின்புதான் ஆழ்வார்திருநகரிக்குச் சென்று, அங்கு பொலிந்து நின்ற பிரானையும், ஸ்ரீ சடகோபரையும் வணங்கா நின்றுர். அங்கு வசிக்கும் ஸ்ரீமதுரகவிகளின் சீடரான ஸ்ரீபராங்குஸ தாஸரை அடி பணிந்து விசாரித்தார். ஸ்ரீபராங்குஸதாஸரும் தனது கூடஸ்த

பின்னர், ஆழ்வாரின் அருளினுல் கற்ற திவ்யப் பிரபந்தங்களை, மன்னனுரின் அருளால் கானமாகத் தாளத்தைக் கொண்டு இயலும் இசையும் தொடுத்துப் பாடினுர். மேலும், இவ்விருள் தருமாஞாலத்தில் மக்கள் இன்புற்று வாழ்வதற்காக ஆழ்வார்களின் அருளிச் செயலகளை மன்னனுரின் இசையின் பேரில் தமது மருமக்களான மேலையகத்தாழ்வாரையும், கீழையகத்தாழ்வாரையும் கொண்டு இப்பிரபந்தங்களுக்குத்தேவகானத்தாலே ராகம் தாளம் முதலியவற்றை அமைத்து பல திவ்ய தேசங்களுக்குச் சென்று பாடச் செய்து பரப்பி வந்தார். நாதமுனிகளின் முக்கிய சீடர்கள் உய்யக் கொண்டாரும், குருகை காவலப்பனுமாவர். அவர்கள் மூலமாகத் திவ்யப் பிரபந்தத்தையும், ரகஸ்யங்களையும் ப்ரசாரம் செய்வித்து. தம்முடைய திருப்பேரனுன ஆளவந்தாருக்கு உபதேசம் செய்யும்படி அருளி 93 வருடம் வாழ்ந்தார்.

இவ்வாறு ஸ்ரீமன் நாதமுனிகள் நாலாயிர திவ்யப் பிரபந்தங்களை ஒன்று திரட்டி, இயலும் இசையும்

# நாலாயிர திவ்யப் பிரபந்தமும்

மாயிற்று. அவ்வாறு நாலாயிர திவ்யப் பிரபந்தத்தைப் பேணிக் காத்து, இயலும் இசையும் தொடுத்து முதலாயிரம், பெரிய திருமொழி, இயற்பா, திருவாய்மொழி என்று வரிசைப்படுத்தி அருளின நாதமுனிகளின் அவதாரச் சிறப்பையும், இப்பிரபந்தத்தில் அவருக்கு உள்ள ஈடுபாட்டையும் கீழ் அறிவோமாக.

சுமார் கி. பி. 9-ம் நூற்றுண்டில், அதாவது, முதல் பராந்தகச்சோழன் ஆட்சி காலத்தில், ஆனிமாதம், அனுஷ நட்சத்திரத்தில் வீரநாராயணபுரம் (இப்போது காட்டுமன்னுர் கோவில் என்று அழைக்கப்பெறுவது) என்ற கிராமத்தில் ஈச்வரபட்டருக்கு அவதரித்தவர் நாதமுனிகள். இவருக்குத் திருத்தகப்பனுர் இட்ட திருநாமம் ஸ்ரீரங்கநாதன் என்பது. வீரநாராயண புரத்தின் எம்பெருமானின் இசைவின்படி, அவ்வூரில் உள்ள மன்னனுருக்குக் கைங்கர்யம் செய்து வந்தார்.

ரான ஸ்ரீமதுரகவிகள் அருளிய ''கண்ணிநுண் சிறுத்தாம்பு'' என்னும் பதினெரு பாக்களைப் பன்னீராயிரம் உரு அநுசந்தித்தால் மற்ற எல்லாவற்றையும் ஆழ்வார் அருளுவர் என்று பெரியோர் கூறுவர் என்று கூறினுர். அதைக்கேட்ட நாதமுனிகளும் ''கண்ணிநுண் சிறுத்தாம்பை'' அவரிடம் உபதேசம் பெற்று நம்மாழ்வார் (சடகோபா) திருமுன்பே பன்னீராயிரம் உரு அநுசந்திக்க, ஆழ்வார் நாதமுனிகள் நெஞ்சில் தோன்றி அவருக்கு வேண்டியதைக் கேட்க, நாதமுனிகள் திருவாய்மொழி முதலான திவ்யப்பிரபந்தங்களைத் தமக்கு அருளும்படி வேணட, ஆழ்வாரும் அன்பினுல் அசரீரிவாணியாய், நாதமுனிகளுக்குத் திருவாய்மொழி முதலான நாலாயிர திவ்யப் பிரபந்தத்தையும், ரஹஸ்யங்களையும், அவற்றின் பொருளையும் ப்ரஸாதித்தார்.

தொடுத்து வரிசைப்படுத்தியது. அவருக்குப் பின் அவதரித்த ஆசார்யர்களுக்கு வெகுசுலபமாக வ்யாக்யானங்கள் செய்ய உதவியாக இருந்தது. ஆழ்வார்களின் ஏற்றத்தையும், அவர்கள் அருளிசசெய்த நாலாயிரதிவ்யப் பிரபந்தத்தின் ஏற்றத்தையும் புத்துயிர்ப்பித்த ஸ்ரீமன் நாதமுனிகளின் ஞானம்தான் என்னே!

இந்நானிலத்தில் ஆசார்ய பரம்பரைக்குக் காரணமான ஸ்ரீமன் நாதமுனிகள் முதல், இப்போது ஆறு நூற்றுண்டுகளுக்கு முன்பு அவதரித்த பூர்வாசாரியர்களுள் கடைக்குட்டியான ஸ்ரீமணவாள மாமுனிகள் வரையில் உள்ள ஆசார்யர்களின் நற்பதங்களை இந்நூற்றுண்டிலும், பிற்காலத்திலும், நாடோறும் வணங்குவோமாக.



# வில்லிபுத்தூர் பெயர் பயந்த விளக்கு

இந்த உலகில் ஞான பக்தி வைராக்கியங்களுடன் திகழ்ந்து முக்தியடைந்த பெரியோர்கள் பலர். அவர்களுள் உயர்நிலையில் நின்று புகழ்பெற்றவர்கள் இருடிகளும் (ரிஷிகள்) ஆழ்வார்களும் என்று பெரியோர்கள் பணிப்பர். இவர்களுள்ளும் இறைவன் பால் ஒருவரோடொருவரிடையே ஏற்றத் தாழ்வு உண்டு என்ற பெற்றியை உரைமன்னன் பெரியவாச்சான்பிள்ளை எடுத்துக்காட்டி மிகத் தெளிவாக விளக்குவர். இருடிகளையும் ஆழ்வார்களையும் ஒப்பநோக்குங்கால் இருடிகளின் பக்தி அணுவளவாகவும் ஆழ்வார்களின் பக்தி மலையளவிலும் காணப்பெறும். அங்ஙனமே மற்றைய ஆழ்வார்களின் பக்தியையும் பெரியாழ்வாரின் பக்தியையும் ஒப்பிட்டு நோக்கினால் மற்றையோர் பக்தி அணுவளவாகவும் பெரியாழ்வாரின் பக்தி மலையளவாகவும் தோற்றம் அளிக்கும். பெரியாழ்வாரின் பக்தியையும் அவரது அருமை மகள் ஆண்டாள் பக்தியையும் சீர்தூக்கினால், பெரியாழ்வார் பக்தி அணுவளவிலும், ஆண்டாள் பக்தி மலையளவிலும் தோன்று நிற்கும்: பெரியவாச்சான் பிள்ளையின் உரையின் இந்த விளக்கத்தைச் சிந்தித்த நிலையில் மதுரையிலிருந்து சீவில்லிபுத்தூருக்குப் புறப்படச் சித்தமாகின்றோம்.

பெரியாழ்வாரும் ஆண்டாளும் பிறந்த ஊர் சீவில்லிப்புத்தூர். இந்த ஊர் விருதுநகர். தென்காசி இருப்புப் பாதையில் உள்ளது. இவ்வூருக்குப் புகைவண்டி நிலையம் உள்ளது. ஆகவே, புகை வணடியில் செல்ல விரும்புவோர் எளிதாக அவ்வூரைச் சென்று அடையலாம். மதுரையிலிருந்து இந்த ஊருக்கு அடிக்கடிப் பேருந்து வசதியும் உண்டு. பேருந்தில் செல்பவர்கள் சீவில்லிபுத்தூரை விரைவில் சென்று அடையலாம். இந்தத் திருத்தலத்திற்கு நான்கு பக்கங்களிலிருந்தும் நல்லசாலை வசதிகளும் பேருந்து வசதிகளும் நன்முறையில் ஏற்படுத்தப் பெற்றுள்ளன. மதுரை மங்கம்மாள் சத்திரத்தில் தங்கியிருக்கும் நாம் அதிகாலையில் எழுந்து தீர்த்தமாடி நல்லாடை புனைந்து கொணடு பேருந்து மூலம் சீவல்லிபுத்தூருக்குப் புறப்படுகின்றோம.

பேருந்தில் சென்று கொணடிருக்கும் பொழுதே 'விலலி புத்தூர்' எனறு இந்த ஊருக்குப் பெயர் வந்த காரணத்தைச் சிந்திக்கின்றோம. நம் சிநதனை புராண நோககில் பாய்ந்து செல்லுகின்றது. இரணியாட்சன் என்ற அசுரன் பூமிக்குப் பெரும்பாரமாய் இருந்து கொண்டு சாதுசனங்களை நலியும பான்மையனாய் அவர்கட்கு எத்தனையோ கொடுமைகளையும் தீச்செயல்களையும் இழைத்து வந்தான் என்பதை நாம் அறிவோம். அப்படிப் பட்ட அசுரனை எமபெருமான் வராக

டாக்டர். ந. சுப்பு ரெட்டியார்.
சென்னை

வடிவங கொணடு வதைத்தான் என்று புராணம் கூறுகின்றது. அந்தத் தலந்தான் வராக க்ஷேத்திரம் என்று வடமொழிப் பெயரால் வழங்கப் பெறுவதாக வில்லிபுத்தூர் தலபுராணம் கூறுகின்றது. வில்லிபுத்தூர் பகுதி ஒரு காலத்தில் செணபகக் காடாக மண்டிக்கிடநதது. இப்பகுதியை மல்லி என்ற வேடப் பெண்ணரசி ஒருத்தி ஆண்டு வந்தாள். எனவே, வராக சேஷத்திரம் மல்லி நாடு என்ற மற்றொரு பெயராலும் வழங்கி வந்தது. இறைவனது சாபத்தால் இரண்டு முனிவர்கள் அவளுக்கு இரண்டு புதல்வர்களாகத் தோன்றினார்கள். இவர்களுள் மூத்தவன் பெயர் வில்லி, இளையவன் பெயர் கண்டன். ஒரு நாள் இளையவன் வேட்டைக்குச் சென்ற இடத்தில் ஒரு புலியால் கொல்லப் படுகின்றான். இதனால் மனம் உடைந்து வாழ்ந்த வில்லியின் கனவில் பாற் கடல் பரந்தாமன் தோன்றி 'அன்பனே, நீ இந்தக் காட்டை அழித்து இதனை ஒரு நகரமாகச் செய்வாயாக; பாண்டி, சோழ நாடுகளிலுள்ள அந்தணர்களைக் குடியேற்றுக' என்று சொன்னதை நினைக்கின்றோம். அதன் படி 'காடு கொன்று நாடாக்கிக் குளந் தொட்ட' நகரமே வில்லி புத்தூர். வில்லியால் நிறுவப் பெற்ற ஊராதலால் வில்லிபுத்தூர் என்ற பெயர் ஏற்பட்டது என்பது அறியத்தக்கது. மல்லி நாட்டிலுள்ள வடவேச்சரபுரம என்ற பழைய நகரத்தை வில்லி புதுப்பித்ததால் அந்த நகரத்திறகு 'வில்லி புத்தூர்' என்ற பெயர் வந்தது என்றும் சொல்லுகின்றனர். இந்த ஊர் இந்தப் பெயராலும் (பெரியாழ். திரு. 1.6:11; 2.5:10. நாச். திரு 2.10; 6:10.) சுருக்கமாகப் 'புத்தூர்' (பெரியாழ். திரு. 1.4 10; 3.5:11.) என்றும் 'புதுவை' (பெரியாழ். திரு. 1.2; 21; 1.5:11. நாச். திரு. 1:10; 5;10 etc.,) என்றும் வேறு பெயர்களாலும் வழங்குவதைப் பெரியாழ்வார், ஆணடாள் திருமொழிகளால் நன்கு அறியலாம்.

இங்ஙனம் வில்லியால் நிர்மாணிக்கப்பட்ட வில்லிபுத்தூர் அக்காலத்தில் செல்வத்திற்கு இருப்பிடமாகத் திகழ்ந்தது. மாட மாளிகை கூட கோபுரங்களால் பொலிவுற்று விளங்கியது.

"பொருப்பன்ன மாடம்பொ லிந்து
தோன்றுமு புதுவை"
(நாச். திரு. 1:10)

"வேதவாய்த்தொழி லார்கள் வாழ்
வில்லி புத்தூர்"
(நாச். திரு. 2:10)

"பொன்னியல் மாடஙகள் சூழ்ந்த
புதுவை"
(நாச். திரு. 3:10)

"போகத்தில் வழுவாத புதுவை"
(நாச். திரு. 8:10)

"பொன்னியல் மாடம் பொலிந்து
தோன்றும் புதுவை"
(நாச். திரு. 12:10)

என்ற ஆண்டாள் திருவாக்குகளால் இதனை நன்கு அறியலாம்.

விஷ்ணுவே முழு முதற் கடவுள் என்ற உண்மையைப் பாண்டியன் அவையில் நாட்டிப் பொற்கிழி யறுத்துப் 'பட்டர்பிரான்' என்று பெயர் பெற்ற விஷ்ணு சித்தர் திருவவதரித்த ஊர் இந்த ஊர்தான். இவர் சேஷபூதராகிய தம் சொரூபத்தை யும் (உண்மை நிலை) சேஷியாகிய ஈசுவர சொரூபத்தையும் அறவே மறந்து 'திருப்பல்லாண்டு' என்ற திருமொழி யால் எம்பெருமானுக்கு மங்களா சாசனம் செய்து தம் எல்லையற்ற அன்பைப் புலப்படுத்தினர். சர்வ இரட்சைகளையும் இரட்சிக்க வழி தேடித் தடுமாறி மங்களா சாசனம் செய்த வரலாறு நம்மை மயிர் சிலிர்க்க வைக்கின்றது. எம்பெருமான வாழ்வையே தமது வாழ்வாக நினைந்த செய்தி நம் உள்ளத்தை உருக்குகின்றது.

இளமையிலேயே இவர் எம்பெருமான் திருவுள்ளத்திற்கு எத்தகைய செயல் உகப்போ அதுவே தாமும் செய்யத் தக்கது என்று உறுதி கொண்டிருந்தவர். வேதம் ஓதுவதுடன் நந்தவன கைங்கரியத்தையும் மேற்கொண்டிருந்தவர். ஒரு நீர்ப்பாங்கான இடத்தில் வேலி வளைத்து அதனிடையே கிணறு குளம் உண்டாக்கி, வெண்தாமரை செந்தாமரை செங்கழுநீர் நீலோற்பலம் மல்லிகை முல்லை மாதவி முதலான நீர்ப்பூ நிலப்பூ கோட்டுப் பூக்களும் திருத்துழாய் முதலியன மலிந்து பொலியுமாறு மலர்வனத்தை உண்டாக்கினர். இம் மலர்களைக் கொண்டு மாலைகள் கட்டி இந்த ஊர்த்திருமாலுக்குச் சாத்தி மகிழ்வார். பூமாலை கட்டுவது போல் பாமாலை கட்டுவதிலும் இவரது அவா எல்லை கடந்து நின்றது. எம்பெருமானுக்குக் கொஞ்சும் தமிழால் பிள்ளைத் தமிழ் பாடித்தந்த பெருமையை இவரிடம் காணகின்றோம். கண்ணனைப் பச்சைப் பசுங்குழவிப் பருவத்திலிருந்து உருப்படுத்தி உலகிற்கு விட்ட பெருமை இப்பெரியாருக்கே உரியது என்று கூறின் அது மிகையாகாது.

இவர் இயற்றிய சொல்மாலைகளைச் சிந்திக்கின்றோம். இவருடைய கற்பனையில் கண்ணன் திருக்கோட்டியூரில் திருவவதரிக்கின்றன். (பெரியாழ். திரு. 1.1.) இவர் தூய நா கண்ணனுக்கு நீராட்டுகின்றது. மருந்தூட்டுகின்றது. அவன் வயிற்றில் அடங்கிக் கிடக்கும் ஈரேழு உலகங்களையும் அவர் கண்கள் கண்டுகளிக்கின்றன. இவர் தத்துவப் பொருள் நிறைந்த கண்ணனின் இளமை விளையாட்டுகளைப் பலர் முன் நிறுத்தி அவர்களை ஆனந்த வாரிதியில் ஆழ்த்தும் வன்மையைத் தமக்கே உரிமையாக்கிக் கொள்ளுவதை எண்ணி எண்ணி மகிழ்கின்றோம். கண்ணனின் திருமேனி அழகினைப் பலருக்கும் காட்டித் தாய் நிலையிலிருந்து கொண்டு தாமும் அநுபவித்துக் களிப்பதையும் காண்கிறோம். (பெரியாழ். திரு 1.2) தம் கண்ணன் திருக்கோட்டியூரில் தோன்றிய காலத்தில் அவ்வூரின் ஆரவாரத்தையும் பெண்களின் குதுகலிப்பையும் தம் சொல்லோவியங்களில் காட்டி மகிழும் அருமைப் பாட்டினைச் சிந்திக்கின்றோம். இப்பெரியார், கண்ணன் திருவடி தொடங்கித் திருமுடிவரை அமைந்த உறுப்புகளின் அழகின் பிழம்பைத் தாம் மட்டிலும் துய்த்து உவப்ப தோடன்றி அவ்வூர்ப் பெண்டிர் அனைவரையும் விளித்து விளித்து அவர்களையும் மகிழ்விக்கின்ற பெருமை நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது. இவர் கண்ணனை அம்புலிக்கு அறிமுகப்படுத்தி அதனை விளிக்கும் அழகு சொல்லுந்தரமன்று. (பெரியாழ். திரு. 1.4) கண்ணன் தளர் நடைப் பருவத்தில் காற்சிலம்பு, கிண்கிணி இவற்றின் தெய்வ ஓதை தம் செவியைத் துளைத்துச் செல்லவும், (பெரியாழ். திரு. 1.7) செங்கீரைப் பருவத்தின் தலையசைப்பும் புன்சிரிப்பும் (பெரியாழ். திரு. 1.5) தம் மனத்தை அள்ளிக் கொள்ளவும் அவற்றில் இவர் ஈடுபட்டு நிற்கும் அற்புதத்தைக் கண்டு களிக்கின்றோம்.

"இடவணரைஇடத் தோளொடு சாய்த்து
இருகை கூடப் புருவம்நெறித் தேறக்
குடவ யிறுபட வாய்கடை கூடக்
கோவிந்தன் குழல்கொடுதின
போது"
(பெரியாழ். திரு. 3.6:2)

[இட அணர்-இடப்பக்கத்து மோவாய்க் கட்டை; கூட-குழலொடு கூட;

(23-ம் பக்கம் பார்க்க)

## ஸ்ரீ பத்மாவதி தாயார் ஆர்ஜித அபிஷேகம்

ரூ. 100/- செலுத்தி யாத்திரிகர்கள், திருச்சானூரிலுள்ள ஸ்ரீ பத்மாவதி தாயாருக்கு, வெள்ளிக்கிழமைதோறும் நடத்தப்படும், சர்க்கார் ஆர்ஜித அபிஷேகத்தைச் செய்விக்கலாம். இதுபோது தொகை செலுத்தும் கிருஹஸ்தரைச் சார்ந்த இரு நபர்கள், அபிஷேக பால் கலசத்தைத் தாங்கிச் செல்லவும், மற்றும் திருக்கோயிலின் ஊர்வலமாக வந்த பிறகு அபிஷேகத்தைக் காணவும் அனுமதிக்கப்படுவர். வார திட்டத்தில் குறிப்பிட்டுள்ள மளிகைச் சாமான்களைத் தவிர, கிருஹஸ்தர் செலுத்தியத் தொகையில் மேற்கொண்டு வேறு எந்தவிதமான மளிகைச் சாமான்களும் வாங்கப்படமாட்டாது. மேலும் கிருஹஸ்தருக்கு எந்தவிதமான பிரஸாதமும் வழங்கப்படமாட்டாது.

செயலாட்சித் தலைவர்.
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

இனி வரும் பத்து ஸ்லோகங்களில்-தத்துவங்களில் (Metaphysical) இவ் விறைவனின் கருணையாகிய தயா தேவி எப்படி எல்லாம் பரிணமிக்கின்றாள், அப்பிரவ்ருத்தியின் விளைவுகள் என்ன என்பதை யெல்லாம் மிக அழகாகப் பேசுகின்றான் கவி.

இப்பதிகத்தின் (71-79) முறையே ஸ்லோகங்களின் கருத்துக்களைப் பேசி ஓரிரண்டு ஸ்லோகங்களை ஆழ்ந்தும் அனுபவிக்கலாம். பரம்பொருள்தான எலலா ப்ரபஞ்சங்களின் நிமித்த காரணமாயும் உபாதான காரணமாயும் அமைவதோடு அவற்றோடே தானும் கலந்து நிற்பதாய் வேதாந்

ஸாஹஸமான வேலையே என்று ஆச்சரியப்படுகினறான் கவி.

ஏன்?

முன்பு இக்கவி தன்னை "பரபராசிகளின் பேரரசன்" (அஹமஸ்யபராத சக்ரவர்த்தி) என்று பேசியுள்ளான. நல்லவர்களையும், யோகிகளையும், புண்யசீலர்களை மட்டுமே நோக்கும இறை நினைவு கருணையாக மாறி "ஓர் முறை என்னை ப்ரபத்தி செய்து என் உதவி நாடும் எவற்றையும் நான் ரக்ஷிக்கிறேன்". "ஸக்ருதேவப்பரபனாய தவாஸமி இதியாசதே, அபயம ஸர்வபூதேப்யோ ததாமி" எனறல்லவா பேசுகிறது.



# திருவேங்கடவனின் திருவருள் தேவி

திரு எஸ். வி. ராமசுவாமி,
செகந்திராபாத்

தங்கள் பேசும். இப்படி விரிந்த ப்ரபஞ்சங்கள் ஈச்வரன், சித், அசித் என மூவகைப்படும். பின்னிரண்டும அசையும் பொருள், அசையாப் பொருள் (matter) என்றும், தன் நினைவால் இவைகளுள் நிறைந்து இவைகளின் தோற்றம், இயக்கம், அழிவு என்ற (ஸ்வரூப, ப்ரவ்ருத்தி, ஸ்திதி) என்ற இயக்கத்தை நிகழ்த்துகின்றான். ஈச்வரன் என்பது ஸித்தாந்தம். இத்தகைய இயக்கம் அவன் உள்ள நினைவாலேயே! அந்நினைவே தயாதேவி.

இத்தகைய ப்ரபஞ்ச இயக்கங்கள் அவன் உள்ளத்தில் கருணை என்ற அடிப்படையில் தோன்றுவதுதான். அவனுடைய ஏனைய குணங்களான ஞானம், பலம், ஐச்வர்யம், சக்தி போன்ற யாவும் இயக்கப்பயன்படுபவையே தவிர தோற்றுவாய்க்குப் பயன்படுபவைகள் அல்ல. எனவே இத் தயாதேவியை "பரப்ருத்" (பொறுப்புள்ளவன் = Responsible) என்றும், "வ்ருஷகிரி விபோரிச்சா" (திருவேங்கடவன் விருப்பம்) ஓர் வடிவெடுத்தது போன்றும் விளங்கும் இத்தயா தேவி என்னையும் கடாக்ஷிக்கின்றாளே? என்று அதனை அவளுடைய ஓர்

அவன் கருணையின் வடிவான தயா தேவியின் மகிமை எல்லையற்றது என வியக்கின்றான் கவி!

"தரிவித சிதசிதஸததாஸதேம
ப்ரவ்ருத்தி நியாமிகா
வ்ருஷகிரி விபோரிச்சா ஸா த்வம்
பரைரபராஹதா
க்ருபண பரப்ருத்கிங்குர்வாண
ப்ரபூத குணாந்தரா
வஹஸி கருணே வைசக்ஷண்யம்
மதிக்ஷண ஸாஹஸே

எம்பெருமானுக்கு ஸ்ரீதேவி பூதேவி என இரு தாயார்களே உளர். 'இப்படி "தயா தேவி" என்ற கற்பனைக்கு இடமேது என்ற ஐயத்தைப் பரிகரிக்கின்றார்.

ஹே! தயா தேவி! நீ, ஸ்ரீதேவி பூதேவி இருவர்களும் சேர்ந்த ஒருருவாய் விளங்குகின்றாய்.

ஸ்ரீ மஹாலக்ஷ்மி திருமார்பில் விளங்கினால் நீ அவன் திருவுள்ளத்திலேயே விளங்கினாய். அவனவதரிக்கும் போதெல்லாம் ஸ்ரீதேவியும் உடன அவதரித்து உதவுகின்றாள் எனில் அவன் அவதரிப்பதற்கே நீதானே காரணம். துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலனம செய்ய அவதரிக்கின்றார் எனில் அது அவன் கருணைதானே! நீ திருவுள்ளத்தில் இல்லாவிடில சிசுபாலனின் நூறு அவதூறுகளைப பொறுப்பானா? இல்லை, வீடணன வந்தபோது (யதிவாரவணஸ்வயம்) தன் மனைவியை அபகரித்த ராவணனே வந்தாலும அபயம் அளிப்பேன் என்பானா? ஸ்ரீ மஹாலக்ஷ்மி சேதனர்களின் தாய்போல் விளங்கி அவர்களுக்கு இம்மை மறுமை நலன்களையளித்து அவர்களுடைய பாபங்களைப் போக்குகின்றாள். ஆனால் நீ வேங்கடவன் திருவுள்ளத்தில் இருப்பதையறிந்தன்றோ தைரியமாக அவன் முன் நின்று தங்கள் தேவைகளை யெல்லாம் கோரிப் பெறுகின்றனர். நீ அவன் மனத்துள் உலவுவதாலன்றோ அவனால் பிறர் குற்றங்களையும் காண முடிவதில்லை.

ஈண்டு ஆழவார் அனுபவம் ஒன்று நினைக்க வேண்டும்.

உலகில் ஏதோ ஒரு சேதனன் இன்னலுற்று இறைவனையும் வைகின்றான்.

இதனைக் கேட்ட ஸ்ரீதேவி எம்பிரானிடத்தில் "அதோ உங்களை வைகினுன், கேளுங்கள" எனபாள். எம்பெருமான் "நமமடியார் அது செய்யார்" என்று மறுப்பன். அவள் பின்னும் அச்சேதனன் வைவதைச் சுட்டினுல் "செய்தாரேல் நன்று செய்தார்" என்று புன்சிரிப்புக் கொள்வளும். என்னே அவன் கருணை என்னும் இத்தயா தேவியின் சக்தி!

மக்களெல்லாம் ஸ்ரீதேவி பூதேவியை வழிபடலாம். ஆனுல் அவ்விரு தயா தேவிகளின் குணங்களும் தன்மைகளும் இத்தேவியின் அடிமைகளாகவல்லவா பணி புரிகின்றன! (க்ஷமாதி நிஷேவிதா)

தமோ குணமேயில்லாத ஸ்ரீவைகுண்டத்தில் எம்பிரானேடு இவ்விரு தேவிகளும் வசிக்கிருர்கள். நீ மட்டுமென்ன? அவனுடைய ஸத்வஸ்வரூபத்துள் கலந்தல்லவோ விளங்குகின்ருய் (ஸ்வயம் வ்யக்திம் பிபர்ஷி) என்று இத்தயா தேவியை நமக்குப் புலப்படுத்துகின்ருன் கவி.

"வ்ருஷகிரி பதேர்ஹ்ருதயா விச்வா
வதார ஸஹாயிநீ
க்ஷபித நிகிலாவத்யா தேவி க்ஷமாதி
நிஷேவிதா
புவன ஜநநீ பும்ஸாம போகாபவாக்
கவிதாயிநீ
விதமஸி பதே வ்யக்திம நித்யாம்
பிபர்ஷி தயே ஸ்வயம்

எம்பெருமான ஐந்து வகையில் சேதனர்களால் வழிபடப்படுகின்ருன். எங்கோ பரமபதத்தில் முக்த தசையில் அநுபவிக்கின்றனர். புராணங்களில் ஈடுபட்டு ராமகிருஷ்ணுதி அவதார மஹிமைகளை விபவங்களென்று ஓர்ந்து ஆனந்திப்பர் பலர். எம்பெருமானது வியூகத் தோற்றமாகிய வாஸுதேவன், ஸங்கர்ஷணன், அநிருத்தன், ப்ரத்யும்னன் என்ற ஈடுபாட்டில் மகிழ்பவர் பலர். ரிஷிகளும் யோகிகளும் தங்கள் இதயத்தில் ஒளியாய்த் திகழும் அவனைக் கண்டு இன்பமுறுவர். இது அந்தர்யாமித்வம்.

யோகிகள் தவத்தாலும், வேண்டுதலாலும திருக்கோயில்களில் அர்ச்சையாக விளஙகுகினமுன. இததகைய க்ஷேத்திரங்கள் பல.

இப்படியெல்லாம் மக்களுக்கு இறைவன் தன்னைக் காட்டி அவர்களைக் காப்பதற்குக் காரணம்? அவன் கருணையே!

இவையாவற்றிற்நம் மேல், யாரும் வேணடாது கேவலம் தயா தேவியின் (கருணையின்) தூணடுதலால் தானே ஓர் அர்ச்சையாக கோவில் கொள்கின்ருன் எம்பெருமான. அவை சில ஸ்வயம்வ்யக்தம் எனபபடும். திருமலையே அத்தகைய ஸ்வயம் வ்யகத க்ஷேத்ரங்களில் முதன்மை வகிப்பதாகும்.

'ஸ்ரீவைகுண்டம் வேணடாம்' எனறு திருமலை ஸ்வாமி புஷ்கரணி தடத்தில் தானுக வந்து அமர்நது எல்லாச் சேதனர்களுக்கு ஐஹிக ஆமுஷ்மிக பலன்களைத் தந்து மகிழ்கின்ருன் என்று, தினமும் நாம் மங்களம் பாடுகின்ருேம்.

"ஸ்ரீவைகுண்ட விரக்தாய ஸ்வாமி
புஷ்கரணீதடே
ரமயா ரமமாணுய வேஙகடேசாய
மங்களம் "

இப்படி அவன் இரங்குவதற்கும் ஏறுவதற்கும் இத்தயாதேவியே ஓர் பலத்த ஏணியாய் அமைகின்ருள் என்று பேசும் இந்த ஸ்லோகத்தைப் படியுங்கள்:

"ஸ்வய முதயிநஃ ஸித்தாத்யா
விஷிக்ருதாஸ்ச சுபாலயாஃ
விவித விபவ வ்யூஹாவாஸாஃ பரம்
ச பதம் விபோஃ
வ்ருஷகிரி முகேஷ்வேதேஷ்விச்
சாவதி ப்ரதிலப்தயே
த்ருட விநிஹிதா நிச்ரேணிஸ்த்வம்
தயே நிஜ பர்வபிஃ "

அவரவர்கள் செய்யும் பாப புண்யங்களுககேற்பவே இறைவன் அருளும் அமையும். ஆனுல் அவன் உள்ளத்தில் கருணை தோன்றிவிடில் (தயா தேவி விளங்கும்போது) நம்மை யறியாமல் ஈடுபடும் சில செயல்களில்கூட சில நனமையிருககலாம். அது நமக்கே தெரியாது. இதனை "யாத்ருஸ்சிக, ப்ராஸங்கிக ஸுஹ்ருத விசேஷம்" என்பா. இதனை விளக்க ஒரு சிறிய உதாரணம.

ஒரு யாததிரிகா தான் கொணடு வந்த ஆஹாராதிகளை மேல்படியில் வைத்துவிட்டு புஷ்கரணியில் இறங்கி ஸ்நானம செய்கிருன். அவன் மூழ்கும் போது ஒரு பசுமாடுஅவவாஹாரத்தை தின்றுவிடுகின்றது. அதனைக் கண்ட யாததிரிகன் கடுஞ்சினமுற்று ஓர் தடி கொணடு அதனைத் துரத்துகின்ருன். அதனை எப்படியாவது ஓர் அடியாவது அடிகக வேண்டும் என நெடுந் தூரம் துரத்தி அடித்துத் திரும்பினுன். ஸ்நானத்தை முடித்தான். சிறிது சாந்திபெற்று ஸந்நிதிக்குச் சென்ருன்.

எம்பெருமானை ஸேவித்து "ப்ரபோ, ஸ்ரீனிவாஸா; என் அபராதங்கள் மன்னித்து அருள வேண்டும்" என்று சத்தமிட்டு கன்னத்தில் பள பள வெனறு போட்டுக் கொள்கின்ருன்.

ஸ்ரீனிவாஸன் திருமுகத்தில் சினம் படர்கினறது. அவன் உதடுகள் "அதமன். ஒரு வாயில்லாப் பிராணியை துரத்தி இம்சிக்கும் பத்ர" என்று முணு முணுக்கின்றது. ஆனுல் அவன் குரலில் "மன்னித்து" என்ற சொல் ஓர் ஒளியைத் தூணடுகின்றது. அவ்வொளியில் உருவாகின்ருள் தயா தேவி.

" போகட்டும் பாபம் " என்கிருள்.

" சற்று முன்புதானே ஓர் பசுவைத் துரத்தித் அடித்துத் துன்புறுத்தினுன்"

" ஆம். அதற்காக "

" அதற்காக என் மனம் குளிர வேண்டுமென்கிருயா? "

" இல்லை. ஒன்று நீங்கள் கவனிக்க வில்லையே"

" என்ன அது? "

" அவன் அப்பசுவைத் துரத்திக் கொண்டு தன்னையறியாமல் உங்கள் கோயிலை ஓர் முறை வலம் வந்தானே "

ஸ்ரீநிவாஸன் திருவுள்ளச் சினம் சிறிது குறைகின்றது. தயா தேவியின் தூண்டல் அவனுக்கு ஒர புன்சிரிப்பைத் தருகினறது.

விளைவு? அபபாப சேதனனையும மன்னித்து அருள்கின்றான்.

இப்படிப் பல காரணங்களைக காட்டி மக்களை வேங்கடவன திருவருளுக்கு இலக்காகச் செய்யும் இத் தயா தேவிக்கு வெடகம கூட இல்லை என்று ''பஹூசசதமா ப்ரசாயயத பத்ரபா'' என்று சித்தரிககும் இநத ஸ்லோகத்தை விடமனமில்லாமல் விளக்க முயல்கினறேன்.

''ஹிதமிதி ஜகதத்ருஷட்யா க்லுப்தை
ரக்லுபத பலாந்தரை:
அமதி விஹிதைரந்யை தாடா
யிதைஸச யத்ருச்சயா
பரிணத பஹூச்சத்மா பத்மாஸஹாய
தயே ஸ்வயம்
ப்ரதிசஸி நிஜாபிப்ரேதம் ந: ப்ரசாயய
தபத்ரபா''

இஹலோக ஸாதனங்களான ஐசவர்யம், ஸந்ததி, வித்தை, கீர்த்தி முதலியவைகளை ஈவதுபோல தேவர்களுக்கு கைவல்யாதி செல்வங்களை ஈந்து ஆத்மானுபவ போகங்களையும் அவர்களை அனுபவிகக வைக்கின்றது வேங்கடநாதனின் கருணை. (தயா தேவி,

இதனுல் அவன் மன நிறைவு அடைவதில்லை. ஏன்? இவையாவும அழிந்துவிடக் கூடிய ஐச்வர்யங்கள். ''இவர்கள் இப்பொழுது அனுபவிக்கட்டும. இவை முடிநதபின் தானே மறுபடியும் வருவார்களென்று'' காத்திருக்கிறாள் தேவி. சேதனர்களும, பெற்ற அநுபவங்களின் அல்பத்வ, அநித்யத்வத்தையும் உணர்ந்து மறுபடி வேங்கடவனிடத்தில் முறையிட வருகினறனர்.

அப்பொழுது தயா தேவி அவர்கள் செய்யும முறையீட்டையே ஓர் ப்ரபததியாய் இறைவனுள்ளத்தில் தோன்றவைத்து அவர்களுக்கு அழியா ஆனநதமாகிய மோக்ஷத்தையளித்து விடுகின்றாள். இப்படி திருவேங்கடவன் தன்னையே சேதனர்களுக்கு ஈந்துவிடச் செய்வது தயா தேவியின் செயலே

தேவியருடன ஸ்ரீ கோவிநதராஜப் பெருமாள்–திருபபதி.
திரு. S.V K S. ஸ்ரீநிவாசன, திருபபதி.



இப்படியெல்லாம் தயா தேவினய நமக்கு உறுதுணையாக்கும் கவி, வரிசை வரிசையாய் தன்னைச் சரணபுகும் மக்களுக்கு அவர்கள் எல்லாத் தேவைகளையும் அளித்து, இன்றோ, நாளையோ, மறுபிறப்பிலோ, என்றோ இன்ப எல்லையான மோக்ஷத்தையும் கண்டிப்பாய அளிக்கும் இத்தயா தேவியின் செயலை யாராலும் மீறமுடியாதென்று திருவேங்கடவனும் இவளுக்கு அநுக்ரஹ விஷயத்தில் ஓர் அடிமையாய்விடுகின்றான் எனப் புகழ்கின்றார். எப்படி ?

த்வதுபஸத நாத்யத்யச்சோவா
மஹாபராளயேபிவா
விதரதி நிஜம் பாதாம்போஜம
வ்ருஷாசல சேகர:

உன்னை வணங்குவர்களுக்கு இன்றோ, நாளையோ, மரணத்திற்குப் பின்போ, அவள் விருப்பம்போல் என்றும் ஆனந்தமாகிய திருவேங்கடவன் திருவடிகளை அருள்கின்றாய்.

''ஹே! தயா தேவி, உன்னை உளளத்தில் தேக்கி ஸப்தகிரியின் உச்சியில் திருவேங்கடவன் ஒரு மணிபோல் விளங்குகின்றான். அவனை தயானத்தில் வைப்போருள்ளம் ஓர் அமுத வெள்ளமாய்த் திகழ்கின்றது. இவ்வாறு நினைத்தாலும் இனிக்கும் ஆனந்தத்தை நீடித்த ஆனந்தமாக்குவதே மோக்ஷமல்லவா! 'ஸ்ரீனிவாஸனே பரம்பொருள் கொணடல் வணணனுய திருமலைமேல் நிற்கும் அக்காள மேகத்தின் அருள் வெள்ளம் என்று விழுமோ என்று அண்ணாந்து வாய்திறந்து அசையாது நோக்கும் பரம பக்தர்களான இச்சாதக பக்ஷிகள் எதிர்ப்பார்த்து நிற்பது எதை? ஹே! தயா தேவி! உன்னையன்றோ!''

அச்சுலோகம் பின் வருமாறு :

''ப்ரணிஹித தியாம் தவதஸம்ப்ருக்தே
வ்ருஷாத்ரி சிகாமணௌ
பரஸ்ருமர ஸுதா தாராகாரா
ப்ரஸீததி பாவநா
த்ருடமிதி தயே தத்தாஸ்வாதம்
விமுக்தி வலாஹகம்
நிப்ருத கருதோ நித்யாயந்தி
ஸ்த்திராசய சாதகா: (80)

(தொடரும்)

(19-ம் பக்கத் தொடர்ச்சி)

வயிறு குடம்பட-வயிறு குடம்போல் குமிழத்துத் தோன்ற; வாய்கடை கூட-வாயின் இரண்டருகும் குவிய]

'' சிறுவி ரல்கள் தடவிப் பரிமாறச்
செங்கண் கோடச் செய்யவாய்
கொப்பளிப்பக்
குறுவெ யர்ப்புரு வம்கூட லிப்பக்
கோவிந்தன் குழல்கொ டூதின்
போது''

(பெரியாழ். திரு. 3.6:8)

[தடவி-குழலின் துளைகளைத் தடவி; கோட-பின்னோக்கிச் செல்ல; கொப்பளிக்க-குமிழ்க்க].

என்ற செய்யுள் படங்களில் காட்டும் நேர்த்தியை அநுபவித்து மகிழ்கின்றோம்.

இன்னும், எம்பெருமான் வைகுந்தம, திருப்பாற்கடல், துவரை முதலான இடங்களைத் துறந்து தம் உள்ளத்தில் ஆர்வத்துடன் பள்ளி கொள்ளப் பெற்ற பேற்றினை,

'' அரவத் தமளியி னோடும்
அழகிய பாற்கட லோடும்
அரவிந்தப பாவையும் தானும்
அகமபடி வநது புகுந்து
பரவைத் திரைபல மோதப்
பளளிகொள கின்றபிரான்''

(பெரியாழ். திரு. 5.2:10)

[அமளி-படுககை; அரவிநதப் பாவை-பெரிய பிராட்டியார்; அகம் படி-உள்ளமாகிய இடம்; பாவை-திருப்பாற்கடல்; திரை-அலை]

'' பனிககடலின பள்ளிககோளைப
பழகவிட்டு ஒடிவந்தென
மனக்கடலில வாழ வல்ல
மாய மணாள நம்பி''

(பெரியாழ். திரு. 5.4:10)

[பனிக்கடல்-குளிர்ந்த திருப்பாற்கடல்; பள்ளி கோள்-பள்ளிக்கொள்ளுதல்; பழக விட்டு-பழகியதாக விட்டு (மறந்துவிட்டு)].

என்ற பாசுரங்களில் கூறி மகிழ்வதை எண்ணி நாமும் மகிழ்கின்றோம். இவர்கள் பெற்றோர் ''விஷ்ணு சித்தன்'' என்று திருநாமம் இட்ட பொருத்தத்தையும் கண்டு வியக்கின்றோம்.

இவ்வளவு தாயன்புடன் திகழும் விஷ்ணு சித்தருக்கு மககள் செல்வம வாய்க்கவில்லை. அச்குறை எம்பெருமான் திருவருளால் நீஙகுவதையும் நினைக்கின்றோம். ஒரு நாள் ஆழ்வார் நந்தவனத்தில் உலவும் பொழுது திருத்துழாய்ச் செடியருகில் அழகெலாம் திரண்டு வந்தாற் போன்ற ஒரு பெண் குழவி கிடப்பதைக் காண்கின்றார். பூமிப்பிராட்டியாரின் அம்சமான அதனை எடுத்து வந்து தன் துணைவியான விரஜையிடம் தருகின்றார். குழந்தைக்குக் கோதை எனத் திருநாமம சூட்டி அன்புடன் வளர்க்கின்றனர் தாய் தநதையர். நாளொரு மேனியும் பொழு தொரு வண்ணமுமாக வளர்ந்த கோதையார் கல்வியும் பெறுகின்றார். சில ஆணடுகளில் எல்லாக கலைகளும் நிரம்பப் பெறுகின்றார். தம் தந்தையாரும் ஏனைய திருமாலடியார்களும் பாசுரங்களைப்பாடி இறைவனைத் துதித்தலையும், தம்மையே மறந்து இறையன்பில் மூழ்கித் திளைத்தலையும் இளமைதொட்டே கண்ணுற்றிருநத கோதையாருக்கு அப்பழக்கமே பணபாக அமைகின்றது. கோதையாரும சொல் நயம் பொருள் நயம் நிறைந்த பாசுரஙகளைப் பாடுவார். எம்பெருமான் லீலைகளைச் சொலலிக் கொணடே தம்மை அறியாமல் நடிப்பார்; கண்மூடி இருப்பார்; இச்செயல்கள் யாவும் தாய் தந்தையருக்கு மகிழ்ச்சியை அளித்தன.

ஒரு நாள் விஷ்ணு சித்தர் எம்பெருமானுக்கு என்று தொடுத்து வைத்திருநத பூமாலையைக் கோதையார் எடுத்துச் சூட்டிக் கொண்டு அழகு பார்க்கின்றார். பின்னர் அம்மாலையைப் பூக்குடலையிலேயே வைத்துவிடுகின்றார். அவர் சூடிக்கொடுத்த மாலையே எம்பெருமானுக்கு அணியப்படுகின்றது. இப்படியே நாட்கள் பல செல்லுகின்றன. ஒரு நாள் கோதையாரின செயலைத் தந்தையார் பார்த்துவிடுகின்றார். தம் மகளைச் சிறிது சினநதுவிட்டு, அன்று எம்பெருமானுக்குப் புதிய மாலையைத் தயாரித்துச் சார்த்துகின்றார். அன்றிரவு எமபெருமான் விஷ்ணு சித்தரின் கனவில் தோன்றி ''ஆழ்வீர், நும் கோதை கொடுத்த மாலைகளே நாம் உகந்த மாலைகள்'' என்று செப்பி மறைகின்றார். அன்று விஷ்ணு சித்தரும் மாலைகளைத் தொடுத்து தன் அருமை மகளுக்குச் சூட்டி கண் குளிரக் கணடு மகிழ்கின்றார். பின்னர் அம் மாலைகளை எம்பெருமானுக்குச் சூட்டுகின்றார். வீடு திரும்பியதும் தம்மகளாரைத் தழுவி உச்சி மோந்து முத்தமிட்டு மகிழ்கின்றார். ''என்னை ஆண்டாள், இவளே'' என்று கூறிப் போற்றுகின்றார். அன்றுமுதல் விஷ்ணு சித்தா ஆண்டாள் சூடிக்கொடுத்த மாலைகளையே எம்பெருமானுக்குச் சாத்துவிக்கின்றார். (தொடரும்)

# தங்கு வசதி விவரங்கள்

திருமலையிலுள்ள கீழ்வரும் காட்டேஜுகளுக்கான வாடகை விவரங்கள் 1–12–78 முதல கீழ்க்கண்டவாறு மாற்றஞ் செய்யப்பட்டுள்ளன.

| எண் | காட்டேஜ் அல்லது அறைத தொகுதியின் பெயர் | இதுவரை வசூலிக்கப் பட்ட தொகை | தற்போது வசூலிக்கப் படும்தொகை (நாள் ஒன்றிற்கு) |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| 1. | எச். ஆர். காவியப்பா காட்டேஜ் | 50–00 | 100–00 |
| 2. | நாராயணகிரி காட்டேஜஸ் 1 to 4, 13 to 20 | 25–00 | 40–00 |
| 3. | டி. பி, காட்டேஜ் (உள்ளே) 1 to 8; ஏ to ஜி; III வது வரிசை 1 மற்றும் 16; சிஎம்சி; விவிசி-6; எஸ்எனசி; கேவி ஆர்; விவிசி-1; விவிசி-8; டிபிசி-10 | 20–00 | 30–00 |
| | (a) மேற்படி காட்டேஜின் A பகுதி | — | 18–00 |
| | (b) ,, ,, B பகுதி | — | 12–00 |
| 4. | டி. பி. காட்டேஜஸ (வெளியே) விவிசி; எம்பிசி; ஏடிசி. | 16–00 | 25–00 |
| | (a) மேற்படி காட்டேஜின் A பகுதி | 9–00 | 15–00 |
| | (b) ,, ,, B ,, | 7–00 | 10–00 |
| 5. | டி.பி.காட்டேஜஸ்-IIIவது வரிசையிலுளள தனிஅறைகள் | 6–00 | 10–00 |
| 6. | எஸ்.வி ஜி.எச்-இல் உள்ள பெரிய அறைத் தொகுதிகள் | 25–00 | 35–00 |
| 7. | எஸ்.வி.ஜி.எச்-இன் மூலையிலுள்ள அறைத் தொகுதிகள் | 20–00 | 25–00 |
| 8. | எஸ் வி ஜி.எச்-இல் உள்ள வேறு அறைத் தொகுதிகள் | 16–00 | 20–00 |

## திருப்பதியில்

| | | கிடைக்கும் அறைகள் எண்ணிக்கை | |
|---|---|---|---|
| 1. | தி. தி. தேவஸ்தானம கஸ்ட் ஹவுஸ்: (இரண்டு படுக்கைகளைக் கொண்ட அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 18 | ரூ. 12/– |
| 2. | ஸ்ரீநிவாச சத்திரம் (மாடியில்) (மேசை நாற்காலிகளைக் கொண்ட அறைகள்)இரண்டு படுக்கைகளைக் கொணட அறைத் தொகுதி ஒன்றிற்கு: | 30 | ரூ. 12/– |
| 3. | ஸ்ரீநிவாச சத்திரம் (கீழ்ப்பகுதியில்) (மேசை நாற்காலி வசதிகளைக் கொண்டது) நான்கு படுக்கைகளைக் கொண்ட அறைத்தொகுதி ஒன்றிற்கு: | 40 | ரூ. 15/– |

குறிப்பு: மேசை, நாற்காலி போன்ற வசதிகள் இல்லாத சத்திரங்களில் தங்கும் அறைகள் யாத்திரிகர்களுக்கு இலவசமாக வழங்கப்படும்.

செயலாட்சித் தலைவா,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# என் கணித சோதிடமும் . . . . அதன் பலா பலன்களும்

## என் ஒன்பதின் தன்மைகளும் கொள்கைகளும் :

ஒன்பதாம் எண்தாரர்கள் முயற்சிகளினுல் ஏற்படும் ஏற்ற இறக்கங்களைப் பொறுத்துப் போராடக்கூடிய சண்டை விரும்பிகள். இவர்கள், '' முயன்றும் முடியாதசெயல் ஒன்று இருக்கிறதா?'' என்று சவால் விடக்கூடியவர்கள். ஆரம்பத்தில் இவர்கள் எடுக்கும் முயற்சிகளில் கடினம் இருந்தாலும் முடிவில் கடும் வெற்றி காணும் வீரர்கள்; கடுமையான செயல்கள், கடமைகள் முதலில் மலைபோல் எதிர்த்து நிற்குமாயின் அவைகளை எல்லாம் தங்கள் மனோதிடம், ஆழ்ந்த மனோசக்தி, மற்றும் தீர்க்கமான தீர்மானத்தினுல் அவற்றைத் தகர்த்தெறிந்து வெற்றிக் கொடி நாட்டிவிடுவார்கள். ஆனுல் இவர்கள் சுபாவத்தில் முன்யோசனையற்று சீக்கிரமான முடிவு எடுப்பார்கள். 'நான் நானே ராஜா' என்று விருப்புக்களின் சுதந்திரத்தை பகிரங்கமாக பிரகடனம் செய்தால் எவர் தான் ஒத்துக்கொள்வார்கள்? தீரம், வீரம் மிகுந்து காணப்படுவதால் இவர்கள் படைவீரர்களாகவும், தலைவர்களாகவும் திகழலாம். இவர்களின் மிகச் சிறந்த அபாயமற்ற தன்மை தான் வார்த்தை, செயல்களின் விபரீதத்தினுல் கடுமையான அபாயங்களை கை கொடுத்துப் புரட்டச் செய்கிறது. சொல்லும் செயலும் துரிதத்தினுல் மாறுபடின் வரும் விபரீதங்களை எங்ஙனம் சமாளித்தல் கூடும்? தீர்க்காலோசனை இவர்களுக்கு இயற்கையில் உணடு எனினும் அவற்றைப் பயன் படுத்தும் விதத்தில் கோட்டைவிட்டு விடுவார்கள். எதற்கும் துணிந்து இருக்கின்ற காரணத்தினுல் வெடிச் சேதம், நெருபபு, விஷக் காற்றடைப்பு போன்றவற்றினுல் அடிக்கடி விபத்துக்கள் நேரிடலாம். விபத்துக்களினுல் காயங்கள், அடிக்கடி துன்புறுத்தலாம். இவர்கள் விதியோடு விளையாடுவதால் சாதாரண காரியங்களிலும் ஏதாவது சிறிய காயங்கள், இரத்தக் கீறுகளி ன்றி தப்பித்தல் சாத்தியமில்லை. இவர்கள் குடும்பத்தாரர்களுடனும், சுற்றத்தாரர்களுடனும போடும் பூசல் களின விளைவாய் எதிர்பாராத கலகங்களும, தீராப்பகை, தீராப்பழி, வஞ்சனைகள் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. விமர்சனங்களை தீவிரமாக ஆக்ஷேபிப்பார்கள்! இவர்கள் தற்பெருமை கொள்ளாதிருக்கையில் தங்களுக்குள் நல்ல எணணம் உடையவர்களாகி, தங்களுடைய திட்டங்களில் ஏற்படும் தடைகளைச் சகித்துக் கொள்ளவும் செய்வார்கள; அவதூறுகளை விரும்ப மாட்டார்கள். இவர்களை நம்பி ஏராளமான பொறுப்புக்களையும், தொந்தரைகளையும், குழுக்களையும், கழகங்களையும் ஒப்படைத்து இவர்களையே அவற்றிற்கெல்லாம் தலைவராகத் தேர்ந்து எடுத்து செயலாற்றச் சொன்னுல மிகச் சிறநது, பாடுபட்டுப் பரிமளிக்கச் செய்வார்கள். பொறுப்புக்களை ஒப்படைத்து கீழ்நிலையில் இரண்டாந்தரமான பதவி கொடுத்தால் திட்டங்களை எல்லாம் சீரடித்து, இதயமற்றவர்களாகி, அனைத்தையும் துகள் துகளாக்கி விடும் இராட்சசர்களாகிவிடுவார்கள். இருப்பினும் அன்பிற்கும், இரக்கத்திற்கும் தங்களால் தங்கள் உடலால் - உள்ளத்தால் எதையும் செய்யத் தயங்கமாட்டார்கள்.

## எண்ணைக் கொண்ட தேதிகள் :

3,6,9, வழிவரும் தேதிகள் பெருக்கமாயினும் சரி, அல்லது செவ்வாயின் உச்சநிலைகளான 21 மார்ச் முதல் ஏப்ரல் 19-26 வரை (Mars+) அல்லது செவ்வாயின் மற்றைய நிலைகளான 21 அக்டோபர் முதல் நவம்பர் 20–27 வரை (Mars – ) உள்ள நாட்கள்.

## எண்ணின் தேவதை :

செவ்வாய் (Mars)

## முக்யமான தினங்கள் :

செவ்வாய், வியாழன் மற்றும் வெள்ளி.

## முக்யமான தேதிகள் :

3, 6, 9, வரிசைப் பெருககங்கள (12, 15, 18, 27 போன்றன).

## முக்யமாக வேண்டிய நட்பு :

3, 6, 9 எண்தாரர்கள் ஒவ்வொருவரும் தமக்குள் இரக்கங்கொண்டு ஒவ்வொருவருக்குள்ளும் நட்பை வளர்க்கப் பாடுபடுவார்கள். அதாவது இது போனற Series (3,6,9,) நபர்கள் ஒரு மித்த Neighbour களாகவும், அல்லது ஒரே தெருவில் குடியிருப்பவர்களாகவும், மிகவும் அந்நியோந்நியமாகப் பழகக் கூடியவர்களாய் இருப்பார்கள்.

## முக்யமான நிறங்கள் :

கருஞ்சிவப்பு, சிவப்பு, இளஞ் சிவப்பு, ஊதா போன்றன.

## முக்யமான மணிகள்: [நகைகள்]

Ruby என்னும் சிவப்புக்கல் பதித்த மோதிரமோ நகைகளோ அணிதல்; Garnet மற்றும் Blood stone போன்ற கற்கள் பதிதத ஆபரணங்கள் கவர்ச்சியும், புகழும சேர்ப்பன.

## முக்யமான உடைகள் .

அடர்நத மற்றும் ஆழ்ந்த நிறங்களில் வரிகள், கட்டங்கள், புள்ளிகள், புட்டாக்கள் கொண்ட ஆடைகள் எடுப்பாகக் காட்டும் தன்மை இவர்களுககு சாத்தியமே. எல்லா இழைகள் படிந்த இளஞ்சிவப்பு,

சிவப்பு, கருஞ்சிவப்பு, ஊதா மற்றும் நீலங்கலந்த சிவப்பு, (இந்திர நீலம்) போன்ற நிறங்களில் அடர்ந்த—ஆழ்ந்த பாணியின் கிரமங்களில் உடைகள் பகட்டும் அழகும் அளிக்கவல்லன. பொதுவாகவே சிவப்பு வாண உடைகள் வீரர்களுக்கும் வீரத்துவத்துக்கு ஏற்றன ஆதலின் இவைகள் உற்சாகம், ஊக்கம், ஓய்வின்மை மற்றும் தீவிர புரட்சியை உண்டாக்கக் கூடியன.

### சங்கீதத்தில் :

போர் அறை கூவல் கேட்கும் இடங்களில் எல்லாம் உணர்வின் பலத்த இரசனைகளில் திணறும் போர் முரசு, பைப், போன்றவற்றினால் வரும் உரத்த எழுச்சியூட்டும் ஒலிகளுக்கும், இசைக்கும் அதிக ஈடுபாடு அளிப்பார்கள். இரத்தப் பெருக்குக் கூடும் அளவுக்கு அதிரும் முரசும், இடியும் இவர்களின் செவிக்கு தாலாட்டும், அதே நேரத்தில் சிந்தனைக்கும் செயலுக்கும் உணர்வூட்டும், இனிமையான இரசிப்புத்தன்மை இவர்களுக்கு கிடையாது.

### உடற்கோளாறுபற்றி :

இவர்களுக்கு எல்லா வகை ஜுரங்களும் ஏற்பட ஏதுவாகிறது. தட்டம்மை, பெரியம்மை, சின்னம்மை போன்ற உஷ்ண நோய்களும் உண்டாகி தொந்தரை அளிக்கும். 'Scar latina' என்ற கோளாறும் ஏற்படலாம். குடிப்பழக்கமிருப்பின் அதுவே ஒரு பெரும் வியாதி.

### முக்கியமான மாற்றங்கள் :

ஏப்ரல், மே, அக்டோபர், நவம்பர் போன்ற மாதங்களில் இவர்களுடைய 9, 18, 27, 36, 45, 63-ம வயதுகளில் உடற்சம்பந்தமான மாற்றங்கள் ஏற்பட வாய்ப்புக்கள் உள்ளன.

### எச்சரிக்கை :

இவர்கள் செய்யும் செயல்களில் மிகுந்த அவசரம் காணப்படுவதால் இவர்கள் மேற்கொள்ளும் கடமைகளில் நிதானம், முன்னெச்சரிக்கையும் இருப்பின் விபத்துக்களை குறைக்க வாய்ப்புக்கள் காணப்படுகின்றன. என்னடா செய்யும் என்றால் பட வேண்டியதுதான்; பட்ட காலிலே படும், கெட்ட குடியே கெடும், மேலும் தீவிர குடிப்பழக்கத்தை அறவே ஒழிக்க வேண்டும். பெருத்த உண்டிப் பழக்கத்தைக் குறைத்துக் கொண்டால் ஜுரங்கள் வருவது குறையும்; பாதுகாப்பு என்று இவர்கள் விரும்புவார்களாயின், விபத்துக்களினின்று தப்பிக்க கீழ்க்கண்ட மந்திரத்தை ஆபத்துக் காலங்களிலோ, மனம் பீதியுறும் நேரங்களிலோ உச்சரிக்கலாம். இதனால் ஓரளவு 'Relief' கிடைக்கலாம்.

'ஓம த்ரயம்பகம யஜாமஹே சுகந்திம புஷ்டிவாதனம
உர்வாருகமிவ பந்தனா ம்ருத்தியோர்
மோக்ஷியமாம் ரித்தாத்'

### முக்கியமான இயற்கை வைத்தியம் :

வெங்காயம், பூண்டு, முள்ளங்கி, கடுகு, இஞ்சி, மிளகு, போன்றவற்றை உணவுடன் அடிக்கடி சேர்த்துக் கொள்ளுதல் அவசியம்; மது வகைகளை த்வேஷித்தல் அவசியம்; அதிகமான உணவு உட்கொள்ளக் கூடாது; எலுமிச்சை இரசத்தில் தேன் ஊற்றி நாள் தோறும் ஓரிரு முறை ஒரு சிறு ஸ்பூன் அருந்தலாம். வேப்பிலை மரத்தினடியில் ஓய்வு கொள்ளலாம்.

### முக்கியமான நபர்கள் :

ஸ்டீபனசன், இரஷ்யாவைச் சேர்ந்த இரண்டாம் நிககோலஸ் மன்னர், மன்னர் எட்வர்டு ஏழாமவர் ஒன்பதாம் எண்ணைச் சேர்ந்தவர்கள்.

### முடிவுரை ;

'எண்கணித சோதிடம்' மெய்யானதா? இப்படிக் கேட்பவர்களுக்கு நாம் என்ன பதிலிறுப்பது? பாம்பு கடித்தால் விஷம் பரவும்; உயிருக்கு வினையூட்டும். இவ்வாறு கொள்வோமாயின் பாம்பு உடலமேலே ஊர்ந்து போய தப்பிக்கும் அதிருஷ்டசாலிகள் இலலாமலா போய்விடுகிறார்கள்? எதையும் அனுபவ ரீதியில் ஒப்புக்கொண்டு பரிட்சை செய்ய வேண்டுமே தவிர வெறும் பேச்சாலும், விமர்சனத்தாலும் தீர்மானித்தல் அறிவார்த்தமான செயலன்று. நம்மேலும் அந்த சோதிடப் பாம்பு ஊற வேண்டும்; அது கடிக்கிறதா? ஊர்ந்து செல்கிறதா என்று பின்னர்தான அந்த விஷத்தைப் போக்கவும், முறிவு கொடுக்கவும் முயல வேண்டும்: கிரகக் கோளாறினால் சோதிடப்படி ஏற்படும் பூமி நடுக்கங்களுக்கும், கடல் கொந்தளிப்பிறகும், எரிமலைகளுக்கும், இயற்கை மற்றும் செயற்கை மரணத்திற்கும் வழி காணாது ஆராய்வின் மூலம் தவித்துக் கொண்டு விடை காணாத விஞ்ஞானிகளுக்கும் அப்பாற்பட்ட பூடக மாயை சக்திகளின் அம்சமாக மேற்சொன்ன சோதிடச் சக்தியும் ஒன்றாக ஏன் இருக்கக் கூடாது? செவ்வாயை ஆராய்ந்து கொண்டிருக்கலாம். ஒப்புக்கொள்ள வேண்டிய விஷயமே ஆனால் இப்பாமரனின் வாய மூடிக் கண மூடிப் போனதன் காரணத்தையும், அதற்கு மேற்கொண்டு எவவெவ்வாறு நிகழலாம் என்று இப்பூமியளவிலேயே ஏன் இன்னும் ஆராய முடியவில்லை? வழி வழியாய் முன்னோர்கள் எழுதிவைத்த கிரமப்படி இப்படித்தான் உயிர் (ஆத்மா), உடலினின்று வெளியை அடைகிறது, கர்ம-காரியங்களுக்கேற்ப பிறவி எடுக்கிறது, முக்தி அடைகிறது; என்று படிப்பதைப் போல் இதுவும் அந்த மாதிரி 'அறிந்து கொள்ளப்பட வேண்டிய பாடம்' என்றும் கொள்ளலாம; 'நம்பிக்கை' என்னும் விதையை ஊன்றினாலன்றி 'சோதிடப் பயிர்' செழித்து வளர முடியாது; அதுமேலும் வளர்ந்து இச் சமூகத்திற்கு எதிர்காலக் கனிகளைத் தரமுடியாது. ஆகவே சோதிடம் போன்றவற்றில் நம்பிக்கை தலை சிறந்த வரப்பிரசாதம்.

மாயையின் கைக்குழந்தையான இவ்வுலக வாழ்வு சதா விளையாடிக் கொண்டும், அழுதுகொண்டும், கிடைப் பதை (உயிரை) சாப்பிட்டுக் கொண டும், விதியையும், மதியையும் நீட்டி மடக்கி வளர முயற்சிக்கின்றது. மாயையின் போஷிப்பில் மெய் மறந்து தவிக்கும் வாழ்க்கைக் காலம் உருளு கிறது; யுகங்கள் நகருகின்றன; வாழ்க்கைக் குழந்தைப் பாலகனு கின்முன்; நமக்கு இவ்வாழ்க்கைக் குழந்தையின் பாரம்பரியம் சாரமற்ற, பூடகங்களான தனமைகளாக இன் னும் விளங்கினபாடில்லே. ஒரு கருத்த கண்ணுடிக் கோப்பையை கையில் கொடுத்து இவ்வுலகமும், பிரபஞ்ச மும் சர்வமும் இதில்தான் குடிகொண் டிருக்கின்றன என்று ஒருவன் சொல் வானுயின் நாமெல்லாம் அவனைப் பைத்தியக்காரன் என்கிருேம; ஆனுல் அதுபோன்றுதான் அறிஞர்களையும் மூடர்களையும் இந்த சடாட்சரத்தின் விதியானது இப்பிரபஞ்சமென்னும் கண்ணுடியுள் இழைகளாக நூறறுக் கொண்டிருககின்றன. கருத்த கண் ணுடிக் கோப்பைக்குள் ஒனறும் தெரி யாது தவிக்கும நம்மைப்போல்தான் வாழககை கேலி செயது கொண்டிருக் கிறது. இந்த அறியாமையை அறிந்து புன்சிரிப்பு சிரித்துக் கொணடிருப் பவன்தான் இறைவன். அவன்தான உயிரை உடம்பில் புகுத்துவதையும், உடமபினின்று ஆத்மனே பிரிப்பதும் ஆகிய தொழிலைச் செய்துகொண்டிருக் கும் விதித்தறியைக் கண்காணிக்கிருன். எந்தத் தனமை வாய்ந்த பொருளிலும் நாம் ஒரு வடிவமைப்பின் மேற்படத் தைத்தான் காண்கிருேம். ஆனுல் அவற்றின் புராதனத்தைக காணப் புரட்டிப் பார்ப்போமேயானுல் அவற் றின் வெளிக்காட்டும் தன்மைகளையும் அவதாரத் திரட்சிகளையும் தெளி வாக்கி உணரமுடிகின்றது. மனிதர்கள் எல்லாரும் தம்மை மனித பாரம்பரிய வழிமுறைகள் என்று நினைக்கிருேம். ஆனுல் நாம் கடவுளின் உருவத் துவமும், தோற்றமும் ஒத்த பொலி வும் கொண்டவர்களாக இருப்பதை ஆழ்ந்து மறந்துவிடுகிருேம். ஆனுல் நம்முடைய பிறப்புரிமைகளை உப யோகமற்ற பொருட்களாக '(a mess of pottage)' மனிதனின், மனிதனுல் உண்டாக்கப்பட்ட நம்பிக்கைகளுககு விற்றுவிட்டோம். நாம் நம்முடைய குருக்களுககு மட்டும் அறிவு வந்ருமல் இருக்கிறது என்று ஏன் துணிய வேணடும்? ஆனுல் சாமர்த்தியசாலி களான நம் முன்னேர்கள் கரை காணுது படித்து முடித்தக் களஞ்சிய பொககிஷ கதவுகளை பூட்டிவைத்து விடடனர். அவைகளின சாவிகளில் காலததுருப்பேறி நமமைத் திறகக விடாது நிற்கின்றன. எல்லாவற்றிற் கும மேலாக பொறுமைக் கடவுளும், சாசுவத தேவதையும் காலங்காலமாக பொறுத்திருக்கின்றன. காலங்களும் நகருகின்றன. தேசங்கள் உயரும்; வீழும். ஞானிகள் தோன்றுவர்; மறைவர்; நம்பிக்கை தோன்றும்; அழியும்; ஆயின் காலம் என்னும் தறியானது விதியை வரைபடமாக நெய்கின்றது. இறுதியில் விதியின் சுறறுக்கள் பூரணத்வம் அடைந்து காலச் சக்கரத்தின நீண்ட குறுகிய சுழற்சிகளால் கடவுள எணணம் என் னும் ஆடையை நிறைவாககி நெய்து விடுகின்றது, அப்போது வெளியாகும் அவதாரங்களின மகிமைகள் எலலா அறிவுக்களஞ்சியங்களை படமபிடித்துக காட்டிவிடுகினறன, நம்பிககை என் னும் புகைப்படத்தால அவறறை யெல்லாம பதிவு எடுத்துக் கொள் வோம; அவற்றில் ஒன்ருக ஏன் எண் கணித சோதிடமும் இருக்கக்கூடாது?

முறறும.

சிவனும, பார்வதியும்-ஸ்ரீகாளஹஸதி—திரு. S V. K. S. ஸ்ரீநிவாசன்—திருப்பதி.



# மதுராபுரவாஸினீ-கீர்த்தனே

**சுத்த தந்யாஸி ராகம் — ஆதி தாளம்**

பாட்டெழுதி பண்ணமைத்தவர் : ஸங்கீத விஸாரத திரு. ஜி. பாலகிருஷ்ண பிரஸாத்–ஹைதராபாத்.

---

ப:– ;ஸ கா மா பா பா ப ப ம க | மா பா ; பா | மா , க கம கஸ ||
ம து ரா பு ர வா | ஸி னீ ம | ஞே ன் ம ணி ||

, நி ஸ கா மா ப நி பநி ப ப ம க | ம ப நி ப ஸ் நி பா | ம க ப ம நி ப ம க ||
ம து ரா பு ர வா | ஸி னீ ம | ஞே ன் ம ணி ||

ஸா ஸ கா ஸா , ஸ நி நி ப ப நி ஸா | கா ஸா ; பா | மா , க க ம க ஸ ||
ம ஹி ஷா ஸு ர ம ர் | த னீ த்ரி | லோ ச னி ||

, நி ஸ கா ஸா க ஸ நி நி ப ப நி ஸா | கா ஸா ; ப ம | க ம ப நி ஸ்நிபம || கஸ-
ம ஹி ஷா ஸு ர ம ர் | த னீ த்ரி. | லோ ச னீ || (மதுரா)

அ. ப :– ; ப கா ம ப நி நி ப ப நி ஸ்ா ஸ்ா | நீ ஸ் நி நி ப நீ | ஸ்ா; ; : ||
ம து ர ஸங் கீ த | வி ஞே தி | னீ ||

: ப கா ம ப நி நி ப ப நி ஸ்ா ஸ்ா | நீ ஸ் நி நி ம நீ | ஸ் ம் ம் க் க்ா ; ||
ம து ர ஸங் கீ த | வி ஞே தி | னீ ||

ஸ்ா ம்ா க் ம் க் க் ஸ் நி ப ம க ம ப நி | ஸ் க் ஸ் ர் க ம | ப நி ஸ் நி ப ம க ம || கஸ-
ம து ஸு த னு ஸோ | த ரீ கௌ | மா ரி || (மதுரா)

ச:– ; , பா ப பா ; பா ப ம க ம | பா ப நீ ப மா | ம க ப ம க ம க ஸ ||
ஆ தி ஸ க் தி நீ | த ன யு னி | மொ ர ல னு ||

ஸா கா ஸா ஸ க மா மா க ம பா | மா ப நி ஸ் நி பா | ப ம மா பா ; ||
ஆ வின் சி பா | வின் ச | வ ம மா ; ||

; ,கா ம பா நீ பா ப நி ஸ்ா | ; நி ஸ் க்ா ஸ்ா | ஸ நி நீ ஸ்ா ; ||
மோ த ம ல ர நன் | னே ல | ரா வே ||

; ,கா ம பா நீ பா ப நி ஸ்ா | ; நி ஸ் க் ம் ப் ம் | கா ஸ்ா க்ா ; ||
மோ த ம ல ர நன் | னே ல | ரா வே ||

க் ம் க் ஸ்ா க் நி க் ஸ் நி ப ம க ம ப நி | ஸ் நி பா மா மா | க ம ப ம க ம க ஸ் ||
ம ஹா தே வி க்ரு | ஷ்ண வி னு த | பா வ னி ||

க் ப் ம் க் ஸ் க் நி க் ஸ் நி ப ம க ம ப நி | ஸ் க் நி ஸ் ப நி ம ப | க ம ப நி ஸ் நி ப ம || க ஸ்-
ம ஹா தே வி க ரு | ஷ்ண வி னு த | பா வ னி || (மதுரா)

அசுரர், மனிதர், தேவர் என்ற இந்த மூன்று பிரிவினரில் தீயதையே யாண்டும் செய்து அதிலேயே சதா நாட்டமாயிருப்பவர் அசுரக் கூட்டத்தைச் சேர்ந்தவர்களாவர். இது தீயது இது நல்லது என்று பிரித்தறியும் பகுத்தறிவுடன் கூடியவர்களாக, தீயதை மனம் நாடினும் அதைத் திருப்பி நல்லதின் பால் செலுத்தும் திறம் படைத்தவர்கள் மனிதர் ஆவர். நல்லதையே எண்ணி நல்லதையே செய்பவர்கள் தேவர்கள் ஆவர். எனவேதான் அசுரர், சுரர் (தேவர்) ஆகியோருக்கு இடையில் அமைகிறது மனித வாழ்வு. மனிதப் பிறவியில் நல்லது செய்தால் தேவராகலாம். அல்லது தீயது செய்தால் அசுரர் ஆகலாம். இம் முப்பிரிவுகளில் தேவநிலையே உயர்ந்ததாகும். அந்தத்தேவர்களின்தலைவன் இந்திரன். அத்தகைய பெருமை வாய்ந்த இந்திரனுக்கே வழிகாட்டியாக இருப்பவர் பிரஹஸ்பதி. எனவே அவர் புரோகிதர்களுள் முக்கியமானவராகிறார். பிரஹஸ்பதியை வியாழ பகவான் என்றும் நாம் கூறுகிறோம். பிரஹஸ்பதி தமது சொரூபமே என்கிறார் பகவான்.

புரோதஸாம் ச முக்யம் மாம்
வித்தி பார்த்த பிருஹஸ்பதிம்|
ஸேனானீனா மஹம் ஸ்கந்தஃ
ஸரஸாமஸ்மி ஸாகரஃ ||24||

''பார்த்தா! புரோகிதர்களுள் முக்கியமான பிரஹஸ்பதி நான் என்று அறிக. சேனைத் தலைவர்களுள் நான் முருகக் கடவுள். நீர் நிலைகளுள் நான் கடல்''

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.




# கீதை காட்டும் நல்வழி

அத்தியாயம்–10 விபூதி யோகம் பகுதி – 6

படை ஒன்றின் வெற்றியானது அதன் சேனாதிபதியைப் பொறுத்தது. சிறிய படை எனினும் திறமை மிக்க சேனாதிபதி அதற்கு வாய்த்தால்வெற்றி அதற்குத் தானே ஒழிய, திறமையற்ற சேனாதிபதியைக் கொண்ட பெரிய படை ஒன்றுக்கு அல்ல. எந்தச்செயலை எப்பொழுது எப்படிச் செய்தால் வெற்றி வாய்க்கும் என்பது திறமை மிக்க சேனாதிபதிக்குத் தெரியும். சிவனது திருக் குமரர்களில் கணபதி அறிவு சொரூபம். மறத்தை ஒடுக்கி அறத்தை நிலை நாட்டுவதே குமரனின் வேலை. அத்தகைய ஆற்றல் மிக்க கந்தனைப் பகவான் தன்னைப் பகர்கிறார்.

நீர் நிலைகளில் பல உள்ளன: குளம் ஏரி, கடல் என அவை பல வகைப்படும். அவற்றில்மற்றவற்றிற்கிடையே கடலுக்குத் தனிப் பெருமை உண்டு. குளம், ஏரிகளில் ஒரு சமயம் நீர் நிரம்பியிருக்கும். மழை காலங்களில் அதிக வெள்ளத்தால் ஏரி குளங்கள் நிரம்பி உடைப்பெடுத்துக் கொள்வதும் உண்டு; கோடைக் காலங்களில் அவை ஒரு சொட்டுத் தண்ணீர் கூட இல்லாமல் வற்றிப் போவதும் உண்டு. ஆனால் கடலின் தன்மை அத்தகையதன்று. எவ்வளவு தான் நதிகள் அதில் நீரைக் கொண்டு போய்க் கொட்டினாலும் சரி, அல்லது சூரிய உஷ்ணத்தால் எவ்வளவு தான் நீர் கடலிலிருந்து ஆவியாய்ப் போனாலும் சரி, நாம் கடலினிடத்தில், ஏரி குளங்களிடம் காணும் மாற்றத்தைப் போல எதையும் காண முடியாது. கடல் தன் நிலை மாறாது எப்பொழுதும் இருக்கும். எனவே நீர் நிலைகளில் தாம் கடல் என்று பகவான் கூறுகிறார். அது மட்டுமல்ல. இயற்கையாய் அமைந்த நீர் நிலைகளில் தெய்வாம்சம் உண்டு. ஏனென்றால் நீரின்றி உலகம் அமையாதல்லவா! அவற்றில் கடல் தனிப் பெருமை வாய்ந்தது. பரந்த நீலக் கடல் நீல மேக ச்யாமளனான கண்ணனது சொரூபமேயன்றி வேறில்லை.

மஹர்ஷீணாம் பிருகுரஹம்
கிராமஸ்ம்யேகமக்ஷரம் |
யக்ஞானாம் ஜபயக்ஞோऽஸ்மி
ஸ்தாவராணாம் ஹிமாலயஃ ||25||

''மகரிஷிகளுள் நான் பிருகு. சொற்களுள் நான் ஓரெழுத்தாகிய பிரண

வம். யகஞங்களுள நான் ஜபயக்ஞம் ஸ்தாவரஙகளுள (நிலைத்திணைகளுள்) நான் இமயமலை''

பிருகு பிரம்மாவின் மானஸ புத்திரர்களில தவத்தில மிகவும் சிறந்தவராவர். எனவே அவரிடத்தில் இறைத் தன்மை அதிகமிருப்பது இயல்பேயாகும். நாம் சொல்லும் ஒவ்வொரு சொல்லுக்கும் பொருளுணடு. 'சொல்லும் பொருளும போல சக்தியும் சிவனும் பிரியாது காட்சி தருகின்றனர்', என்று மகாகவி சாளிதாசர் ஒரு சுலோகத்தில் தெரிவிக்கிறார். வாக்கு அல்லது சொல் எப்படி உண்டாகிறது? எழுத்துக்கள் சேர்ந்து சொல் உணடாகிறது. உலகில் எத்தனை மொழிகள் உண்டோ அநத மொழிகளிலுள்ள எழுத்துக்கள் சோந்து எத்தனை சொற்கள் உருவாக முடியுமோ, அந்த அனைத்துச் சொற்களிலும் தலையான தாகவும், அடிப்படையானதாகவும் அமைகிறது ஒரு சொல். அது தான் 'ஓம்' எனும் பிரணவம். இந்தப் பிரணவம் அடிப்படையில் ஓரெழுத்தால் அமைந்த சொல்லேயாகும். 'ஓம்' என்பது பிரம்மத்தைக் குறிக்கிறது. 'அடம்' என்ற மூன்றும் சேர்ந்து, 'ஓம்' ஆகிறது. இதில் 'அ' படைத் தலையும், 'உ' காத்தலையும், 'ம்' அழித்தலையும் குறிக்கின்றன. ஒலிகளின் தொகுப்பு 'ஓம்' என்பதேயாகும். விநாயகப் பெருமான் ஓம்கார வடிவினன். 'ஓம்' எனும் ஏகாக்ஷரம் நாதப் பிரம்மமாகும். இத்தகைய மகிமை வாய்ந்த 'ஓம்' காரமானது ஹிநது சமயத்தில் மட்டுமின்றி கிறிஸ்தவம், இஸ்லாம் ஆகிய பிற சமயங்களிலும் தனி இடத்தைப் பெற்று விளங்குகிறது. நாம நமது பிரார்த்தனையின் போது 'ஓம்' காரத்தைப் பயன்படுத்துவது போல கிறிஸ்தவர்கள் 'ஆமென்' என்ற வார்த்தையையும், முஸ்லிம்கள் 'ஆமீன்' என்ற பதத்தையும் பயன் படுத்துகின்றனர். இந்த 'ஆமென்' 'ஆமீன்' ஆகியவை 'ஓம்' என்பதன் திரிபுகளேயன்றி வேறு அல்ல. ஆக 'ஓம்' அனைத்து சமயங்களுக்கும் பொதுவானதொரு மகிமை வாயந்த சொல்லாகும். அதற்கு ஒப்பான சொல் வேறு எதுவும் இல்லையாகையால் தாம் அந்த ஓம்கார சொரூபம் என்று பகவான் பகர்கிறார்.

எந்தச் செயலானது மனிதனைப் புனிதப் படுத்துகிறதோ அந்தச் செயலானது யக்ஞம் எனப்படுகிறது.

'' யகஞோ தானம் தபஸ்சைவ
பாவனானி மனீஷிணாம ''

'யக்ஞம், தானம், தவம் ஆகியவை மனிதர்களைப் புனிதப்படுத்துகின்றன.' யக்ஞங்கள் பல வகைப்படும். திரவிய யக்ஞம், பூத யக்ஞம் என்ற எத்தனையோ வகை யகஞங்களுள் மிகச சிறந்தது ஜபயக்ஞமாகும். ' மற்ற யக்ஞங்களைச செய்வதற்குப் பொருள் வேண்டியதிருககும். ஆனால் ஜபயக்ஞம் பொருட் செலவற்றது. ஜபயக்ஞம் என்பது இறைவனது நாமத்தை பக்தியுடன் ஜபித்தலேயாகும். இறைவனது நாமத்தை ஜபிக்க நமககுத் தேவைப் படுவது ஒன்றுபட்ட மனமேயாகும். நாம் ஜபத்தில் அதிகம் ஈடுபடுகின்ற அளவு நமது மனததிலுள்ள மாசுகள் அகன்று மனமானது தூய்மை அடைகிறது. எல்லோரும் எப்பொழுதும் இறைவனது நாமததை ஜபிக்கலாம். மற்ற யக்ஞங்களிலெல்லாம் நன்மை தீமை இரணடும் ஓரளவில் கலந்திருக்கின்றன. உதாரணமாக விலையுயர்ந்த பொருள்களைத் தீயிலிட்டுச் செய்யப் படும் யக்ஞத்தில் பஞசமும் பட்டினியும் நிலவும் இன்றைய நிலையில் பொருள் விரயம் என்ற குற்றம் சேர ஓரளவு இடமுண்டு. ஆட்டைப் பலியிட்டுச் செய்யப்படும் யக்ஞத்தில் ஒரு உயிர்ப் பிராணியை வதைத்துக்கொலை செய்யும் குற்றம் சேர இடமுணடு. ஆனால் ஜபயக்ஞத்தில் இத்தகைய எந்த விதக் குற்றத்திற்கும் இடமில்லை. எனவே கலியுகத்திற்கேற்ற யக்ஞம், அனைவரும் ஈடுபடக் கூடிய யக்ஞம் ஜபயக்ஞமேயாகும்.

ஜபயக்ஞத்தின் பெருமையை நன்குணர்ந்து அனைவரையும் அதில் ஈடுபடச் செய்த பெருமை இருபதாம் நூற்றுண்டு கண்ட மாபெரும் மகானை ஸ்ரீ சுவாமி சிவானந்தரைச் சாரும். ஒரு முறை சிவானந்தாசிரமத்தில் குரு தேவர் சிவானந்தருக்கும் அவரது பக்தர்களுககுமிடையே கீழ்க்கண்டவாறு சம்பாஷணை நிகழ்நதது.

**பக்தர் :** சுவாமிஜி! 'அல்லோபதி' வைத்தியம் சிறந்தது என்று சிலர் கூறுகின்றனர். 'ஹோமியோபதி'யே மேலானது என்கின்றனர் மற்றும் சிலர். மற்றும் சிலரோ இந்தக் காலத்திற்கு அனைவருக்கும் உகந்தது 'நேசுரோபதி' (இயற்கை வைத்தியம்) என்கின்றனர். இது பற்றி உஙகளது கருத்து என்ன என்பதை நாங்கள் தெரிந்து கொள்ளலாமா?

**சுவாமிஜி :** அனைத்திலும் சிறந்தது 'நாமாபதி' தான். 'Namapathi' என்றால் பகவன் நாமத்தை பக்தியுடன் ஜபிப்பது ஆகும். இறைவனது நாமத்திற்கு நிகரான ஒளஷதம் வேறு எதுவும் இல்லை. எனவே நீங்கள் இத்தனை விதமான மருந்துகளில் நம்பிக்கை வைத்திருப்பதற்கிடையில் பகவன் நாம ஜபத்திலும் இடைவிடாது ஈடுபடுங்கள். அதனால் உடற் பிணிகளெல்லாம் அகலவதுடன் கூட பிறவிப் பிணியெனும் பெரும் பிணியும் தீர வழி பிறக்கும. எனவே ஜபம் செய்யுங்கள்.

மிகச் சிறந்த அத்வைதியான ஸ்ரீ சங்கராச்சாரியார் தலை சிறந்த பக்தி நூல்களை பலவற்றை இயற்றி சிறந்த பக்தராகவும் விளங்கியது போல, இந்த நூற்றாண்டின் ஒப்பற்ற ஞானியாகத் திகழ்ந்த ஸ்ரீ சுவாமி சிவானந்தர் தீவிர பக்தராகவும் விளங்கினார். அவர் பஜனை செய்யும் போது பார்த்தால் ஸ்ரீ கௌராங்க மகாப்ரபுவைப் போலவேதோற்றமளிப்பார். சிவானந்தாசிரமத்தில், அவரால் பல ஆண்டுகளுக்கு முன்னர் தொடங்கி வைக்கப் பெற்ற அகண்ட மகா மந்திர ஜப யக்

ளும் இன்றும் அங்கே தொடர்ந்து நிகழ்ந்து வருகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

அச்யுதானந்த கோவிந்த
நாமோச் சாரண பேஷஜாத்|
நச்யந்தி ஸகலா ரோகான்
ஸத்யம் ஸத்யம் வதாம்யஹம்||

''அச்யுதா, அனந்தா, கோவிந்தா என்ற பகவன் நாமங்களைஜபிப்பதாகிய சிறந்த மருந்தினால் அனைத்து வியாதிகளும் குணமடைகின்றன என்று மீண்டும் மீண்டும் நான் உறுதி கூறுகிறேன்'

இது பக்த சிகாமணியான நாரதரின் கூற்று. எனவே யக்ஞங்களில் ஜபயக்ஞமாவேன் என்று பகவான் கூறுகிறார்.

பூமியில் முளைத்து அந்த இடத்திலேயே உயிரோடிருப்பது எதுவோ அது 'ஸ்தாவரம்' எனப்படுகிறது. இதைத் தமிழில் நிலைத்திணை என்கிறோம். பூமியில் தோன்றிப் பல இடங்களிலும் சஞ்சரித்து உயிர் வாழ்பவை இயங்கு திணை எனப்படுகின்றன. மலைக்கும் உயிர் உண்டு என்பது அறிஞர்களின் கொள்கை. மலைக்கும் தோற்றம், வளர்ச்சி, அழிவு ஆகியவை உண்டு. ஒரு காலத்தில் கடலாயிருந்தது பிறிதொரு காலத்தில் மலையாகிறது. இன்று இமயமலை உள்ள பகுதி முன்பொரு காலத்தில் கடலாயிருந்தது எனவும், இன்றைய இந்து மகா சமுத்திரப் பகுதியில் முன்பு மலையிருந்தது எனவும் புவியியல் நிபுணர்கள் கூறுகின்றனர். அது மட்டுமல்ல. இமயமலை வளர்ந்து கொண்டே போகிறதாம். இது இன்றைய விஞ்ஞானக் கண்டுபிடிப்பு. ஆனால் அதன் வளர்ச்சி பல நூற்றாண்டுகளில் ஒரு சிறிய அளவினதே என்பது அவர்கள் கணக்கீடு. நிலைத்திணைகளில் பூமியில் மிகஉயர்ந்து காணப்படுவது இமயமலையேயாகும். இமயமலையில் உள்ள எவரெஸ்ட் சிகரமே உலகிலுள்ள அனைத்து மலைச் சிகரங்களிலும் உயர்ந்ததாகும். யாண்டும் பனி படர்ந்த பல கண் கவர் சிகரங்களைக் கொண்டு விளங்கும் இமயமலை பல விதங்களில் தனிச்சிறப்புடன் திகழ்கிறது.

சிவ பெருமானின் உறைவிடம் இமயமலை எனபது நமது புராணங்களின் கூற்று. அதனால் தான் சிவனார் 'ஹிமவான்' எனவும், பார்வதி தேவி 'ஹைமவதி' எனவும் அழைக்கப்படுகின்றனர். அரிய பல மூலிகைகள் அடர்ந்த காடுகளை உடையது இமயமலை. அந்த மூலிகைகளினால் தயாரிக்கப்படும் மருந்துகள் மிகவும சகதி வாய்ந்தவை. ரிஷிகேசம் சிவானந்தாசிரம ஆயுர்வேத மருந்துகளின் தனிப்பெரும் சிறப்பிற்கான காரணங்களில் இதுவும் ஒன்றாகும். வற்றாத ஜீவநதிகளாகிய கங்கை, சிந்து, பிரமபுத்திரா போன்ற நதிகள் பலவற்றின் பிறப்பிடம் இமயமலை. பாரதத்தின் வடக்கிலுள்ள இயற்கை அரணாக விளங்குவது இமயமலை. கயிலங்கிரியை உடையது இமயமலை. இவ்விதம் இமயமலையின் பெருமைகளை அடுககிக் கொண்டே போகலாம். இத்தகைய சிறப்புக்களால் கவரப்பட்ட மகாகவி பாரதியார், 'மன்னும் இமயமலை எங்கள் மலையே' எனறு பெருமையுடன் கூறுகின்றார். எனவே தான் (ஸ்தாவராணாம் ஹிமாலய.) நிலைத்திணைகளுள் நான் இமயமலை எனகிறார். உயர்ந்த மலையினைப் பாாக்கும் பொழுது அங்கு இறைவனது புகழ வெளிப்படுகிறது.

இமயமலையின் பெருமையையும் தெயவீகத் தன்மையையும் உணர ஒருவர் நேரில் அதைச் சென்று காண வேண்டும். ஏன் அன்றும் இன்றும் ஆயிரமாயிரம் மக்களை அது தன் பால் ஈர்த்த வண்ணம் இருக்கிறது என்பதை அப்பொழுதுதான் ஒருவர் புரிந்து கொள்ள முடியும்.

(தொடரும்)

# நோயின்றி வாழும் வழி!

ஞானேதய வைத்தியர்
திரு சி. க. மாணிகக வாசகம்-செவந்தம்பள்ளி.

நோயற்ற வாழ்வே குறைவற்றச் செல்வம்! குறைவற்றச் செல்வத்தை அனைவரும் அடைய வேணடுமாஞல் நோயின்றி வாழ வேண்டுமலலவா?

நோயின்றி வாழும் வழி முறையை இதன் மூலம் அறிவோமாக!

மனிதர்களுக்கு நோய்கள் எப்படி ஏற்படுகின்றன என்பதையே ஆராய்ந்து வருவது விஞ்ஞான உலகம். ஆனல் மனிதர்களுக்கு மட்டும் ஏன் அடிக்கடி நோய்கள் வருகின்றன என் பதை மெய் ஞானத்தால் மட்டுமே அறிய முடியும். அதாவது மனித இனத்தைத் தவிர மற்ற ஜீவராசிகள் முதுமையையும் அடைவதில்லை; நோயுற்று மற்றவைகளின் உதவியை யும் நாடியதில்லை என்பது அனைவரும் அறிந்த விஷயமே ஆகும். மேலும் விலங்கினஙகளும் பறவை இனஙகளும் முதுமையடைந்து மூக்குக் கணணடி போட்டதாகவும் தெரியவில்லை; எதிர்காலத்திற்காக (தேனீ, எறும்பு தவிர) உணவு வகைகளை சேமித்து வைத்ததாகவும் அறியவில்லை. இதற்கு எல்லாம் மூலக் காரணத்தை ஆராய் கின்றபோது முதற்படியாக நாம் புரிந்து கொள்ள வேண்டியது;

அவைகள் எவ்வித நோய்களினுலும் தாக்கப்படுவதில்லை என்பதாகும். மனிதர்களுக்குக் கட்டுப்படாத, தன் னிச்சையாக திரியும் விலங்கினங்கள் பறவை இனங்களுக்கு ஏன் நோய்கள் வருவதில்லை என்பதைச் சிந்தித்துப் பார்க்கின்றபோது ஓர் உணமை நமக்கு புலப்படுகின்றது. அதாவது அவைகள் உட்கொள்ள வேணடிய ஐந்து சுவைகளான காரம், கசப்பு, இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு ஆகிய உருசிகளுக்குரிய உணவுப் பொருட் களை (காய், கனி, தழை, இறைச்சி, தானியங்கள்) உட்கொள்ளுகின்றன.

ஆனல் மனிதர்கள் முறைப்படி உண்ண வேண்டிய அறுசுவை உண வில் 'கசப்பு' சுவைக்குரிய உணவு வகைகளை மறந்து நீக்கி மீதமுள்ள காரம், இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு, உப்பு ஆகிய ஐந்து சுவைகளுக்குரிய வைகளையே உணகின்றனர். ஆக, ஓர் உருசி உணவில் குறைந்து விடுகின்ற தல்லவா? இதன் காரணமாக மனித உடலில் நோய்க்கிருமிகளும், புழுப் பூச்சிகளும் உற்பத்தியாகி அழியாமல் பெருகி பல தரப்பட்ட நோய்கள் ஏற் பட்டு விரைவில் மடியும் வாய்ப்பு ஏற் பட்டு விடுகின்றதல்லவா? மேலும் மேறகூறிய கிருமிகள், புழுக்கள், பூச்சிகள வயிற்றினுள் இருந்து கொண்டு மனித உணவில் ஒரு பகுதியை கிரகித்து உட்கொண்டு விடு வதால், மனிதருக்கு போதிய சக்தி கிடைக்காதாதலும், பல ஹீனமாகத் தானே வாழ வேணடிய நிலை உள்ளது அல்லவா?

இதனுல், விரைவில் மடிந்து விடு வோம், என்று மனிதர்கள் தம்மீது தன்னமபிக்கை யிழந்து, எதிர்கால இயலாமைக்காக ஏராளமான பொருட்களைச் சேமித்து வைககின் றனரல்லவா?

ஆனல் 'கசப்பு' சுவைக்குரிய அகத்திக்கீரை, பாகற்காய், சுண்டைக் காய், வேப்பம்பூ, போன்றவைகளில் ஏதேனும் ஒன்றினை அனுதினமும் உணவில் கலந்து உட்கொணடு வந் தால், நோய்க் கிருமிகள் உற்பத்தி யாகாமலும், எதிர்காலத்தில் மட்டு மின்றி எப்போதும் இயலாமையின்றி நோயின்றி முழு சக்தியுடன் வாழ முடியும் என்பதை அனுபவத்தில் அறியலாம். சேமித்து வைக்க வேண டிய அவசியமும் நீங்கி விடும்.

ஒரு மனிதன் முழு அறிவு எப்போது பெற முடியும்? ஆறுவகை 'உ'ருசி யினைக் கொண்ட உணவினை அதாவது 'அறு உ'ருசிகளைச் சாப்பிட்டு வந்தால் உடலும் உள்ளமும் முழு வளர்ச்சி யடைந்து நற்சிநதனை (அறிவு)யுடன் நலமுற வாழலாம். இதற்கு மூலக் காரண முதுமொழியை நாம் இன் றும், நம்மையறியாமலேயே கூறிக் கொண்டு வருகின்ரேம் அல்லவா!

அதாவது சிலர், தவறு செய்பவர் களைப் பார்த்து அடிக்கடி கேட்கும் கேள்வி:

நீ வயிற்றுக்கு என்னச் சாப்பிட் டாய்! அறிவு இல்லையா உனக்கு? என்ற கேள்வியே ஆகும்.

இதன உட்பொருளை சிந்தித்துப் பார்க்கின்றபோது ''அறிவு இல்லை யா'' என்பது அறுவகை 'உ'ருசி உணவு (அறிவு=அறுஉ) வீட்டில் உண் பதற்கு இல்லையா என்பதே ஆகும். ஆக அறுவகை உருசி உணவினை உட் கொண்டு வருவதாலேயே பூரண உடல் நலமும் அறிவும் ஆற்றலும் (ஆற்றல்= ஆறுவகை உருசியில் வருவது) அடைந்து எதிர்கால பயமின்றி இனிதே வாழ முடியும் என்பதை அனுபவத்தில் உறுதியாக அறியலாம்.

அறிவுடையார் எல்லாம் உடையார்
அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்

—என்ற வள்ளுவர் குறள்படி, அறு வகை உணவில் 'அறிவு' பெற்று விட் டால் அனைத்தையும் உடையவராகலா மன்ரே!

இதுவரை ஐந்து சுவைகளையே உட் கொண்டதால், ஐந்தால் பெற்றிருந்த ''அஞ்சுந்தன்மை''யை இனி ஆறு சுவை உணவால் நீக்கி 'ஆற்றல்' பெறலாம் அல்லவா!

''உணமையைச் சொன்னல் கசக் கிறதா'' என்பது பழமொழி. இதி லிருந்து உண்மையான வாழ்வு கசப்புச் சுவையில அடங்கியுள்ளதை உணர் வோமாக! அனைததுத துன்பங்களுக் கும் மூலகாரணமாக அமைவது 'அறி யாமை' தான் என விவேகானந்தர் கூறியுள்ளார்.

ஆகவே மேற்கூறிய அறுசுவை உணவை முறையாக உணடால், 'அறிவு' பெற்று அறியாமையை அகற்றிவிடலாம் அல்லவா?

அறிவு பெற்று, அறியாமை அகன் றால் அனைத்து துன்பங்களும் மறைந் தோடி, நோயின்றி வாழ்ந்து, அள வற்றச் செல்வம் அடைந்து, நீடூழி வாழ்வோமல்லவா?



# அனுமன் கதை



## 24. அடக்கினர்! அடங்கினர்!

அடக்கினாய் ஆற்றல் காட்டி அஞ்சனைச்
செல்வ அன்று
மடங்கலபோல் மொய்ம்பினானை வீமனை
மகிழச் செய்தாய்!
அடக்கினாய் பின்பு நீயே அடங்கினாய
அருச்சு னனமுன்!
அடக்கத்தின் வடிவே எந்தன்
அண்ணலே போற்றி! போற்றி!

*(மாருதிதாசன்)*

இராமபிரானின் கட்டளைப்படி, அனுமார் சேதுவிலிருந்துகொண்டு விபீடணன் ஆண்டு வரும் இலங்கைக்குப் பாதுகாவலாக இருந்து வந்தார். அனுமாரின் எண்ணமும், சிந்தனையும், செயலும் இராமபிரானைப் பற்றியதாகவே இருந்து வந்தன.

திருமாலின் அவதாரமாகிய இராமபிரான் துவாபரயுகத்தில் கண்ணபிரானாக அவதாரம் செய்தார். அங்கிங்கெனாதபடி எங்கும் ஒளிமயமாக உள்ளவன் ஆண்டவன். இறைவன் எல்லாப் பூதங்களிலும் இரண்டறக் கலந்திருக்கிறான். சாதுக்களாக உள்ள சான்றோருக்குத் தீங்கு ஏற்படாமல் பாதுகாக்கவும், தீயோரைத் திருத்தி நல்வழிப்படுத்துவதற்காக அவரை அடக்கித் திருத்தவும், தருமத்தை உலகில்

---

திரு. மா. சீதாராமன், M.A., BEd.,
பெருங்கட்டூர்.

---

நிலை நாட்டவுமே இறைவன் உலகில் திருவவதாரம் செய்கிறான். இக்கருத்தைப் பகவத் கீதையில் கண்ணபெருமானே கீழ்வருமாறு கூறுகிறான்.

பரித்ராணாய ஸாதூனாம்
விநாஸாய ச துஷ்க்ருதாம் |
தர்ம ஸம்ஸ்த் தாபனார்த்தாய
ஸம்பவாமி யுகேயுகே ||

கண்ணபிரான் இவ்வுலகில் அவதரித்த காலத்தில், வடநாட்டின் ஒரு பகுதியான குருநாட்டைத் துரியோதனாதியர் ஆண்டு வந்தனர். குருநாடு என்பது துரியோதனாதியர் நூற்றுவர்க்கும், பாண்டவர் ஐவர்க்கும் உரியது. எனாலும், துரியோதனன் பாண்டவருடன் வஞ்சனையாகச் சூதாடிப் பாண்டவர்க்குரிய நாட்டுப் பங்கினையும் பறித்துக் கொண்டான். காடு சென்று வாழுமாறு பாண்டவர்க்குத் துரியன் கட்டளையிட்டான். இதனால் நல்லவர்களாகிய பாண்டவர்கள் காட்டில் அலைந்து திரிநது வாழ்ந்தனர். பாண்டவர்கட்குத் துணையாகப் பகவான் கண்ணன் உதவிசெய்து வந்தார்.

ஒரு சமயம், பாண்டவர்கள் இமயமலைச்சாரலில் தங்கியிருந்தனர். திரௌபதியும் பாண்டவர்களுடன் தங்கியிருந்தாள். அவ்வாறு தங்கியிருக்கும்போது, ஒரு நாள் திரௌபதியின் முன்பாகத் தாமரை மலர் ஒன்று காற்றில் மிதந்து வந்து வீழ்ந்தது. அந்தத் தாமரை மலரில் ஆயிரம் இதழ்கள் இருந்தன. அம்மலரின் மணத்திலும் அழகிலும் திரௌபதி தன் மனத்தைப் பறி கொடுத்தாள். அம்மலரைப் போன்ற மற்றொரு மலரைத் தேடித் தருமாறு திரௌபதி வீமனை அன்புடன் வேண்டிக் கொணடாள். மங்கை ஒருத்தி கண் அசைத்து விட்டால், ஆடவர்க்கு மாமலையும் ஒரு கடுகு போன்றது தானே!

திரௌபதி விரும்பிக் கேட்ட அழகிய மலரைக் கொண்டு வருவதற்காக வீமன் புறப்பட்டு விட்டான். அந்த அற்புத மலரைத் தேடிப் பீமன் கந்தமாதன மலைச்சரிவுகளிடையே சென்று கொண்டிருந்தான். வழியில் கிடந்த மரங்களையெல்லாம் பிடுங்கி எறிந்து கொண்டே சென்றான். பெருமுழக்கம் செய்து கொண்டே சென்றான்.

வீமன் எழுப்பிய பேரோசைக்கு அஞ்சிப் பறவைகளும், விலங்குகளும் நாலாபுறமும் ஓடி ஒளிந்தன. சேதுவில் சிலகாலமும், இமயத்தில் சிலகாலமும் தங்கி வந்த அநுமார் இப்போது இமயமலையில் தங்கியிருந்தார். வீமன் எழுப்பிய பேரோசையைக் கேட்டு, அப்போது கணணயர்ந்திருந்த அநுமார் விழித்துக் கொண்டார்; தன் தம்பியின் ஆரவாரமே அது என்பதை உணர்ந்தார்.

தன் தம்பியாகிய வீமனுக்கு அநுமார் நன்மை செய்ய நினைத்தார். சற்று நேரம் தன் தம்பியுடன் விளையாட எண்ணங் கொண்டார். எனவே தான் படுத்திருந்த வாழைக் காட்டின் வழியே வீமன் செல்ல வொணணாது தடுக்கத் தன் வாலை அவ்வழியே நீட்டிப் படுத்துக்கொண்டார். தான் இருப்பதைத் தம்பிக்குணர்த்தத் தன் பெரிய வாலினைச் சுழற்றித் தரையில் அடித்தார். இதனால் பேரோசை எழுந்தது. இவ்வோசையைக்கேட்டு வீமன் அநுமார் இருக்குமிடம் வந்து சேர்ந்தான்.

வீமன் : வழியடைத்திருக்கும் வானரமே! நீ யார்? இக்கானகத்தில் வந்து வாழும் காரணம் என்ன?

அநுமார் : அடே அறிவில்லாத மனிதனே! என்னையா நீ யாரென்று கேட்கிறாய்? என்னை இவ்வுலகமே நன்குஅறியுமே! உனக்கு எங்கிருந்து இவ்வளவு துணிவு வந்தது? உறங்கிக் கொண்டிருந்த என்னை எழுப்பியதுமல்லாமல் என்னைப் பார்த்து ''நீ யார்'' என்று கேட்கிறாய்? பேதையே! வந்த வழியே திரும்பிப் போய்விடு.

வீமன் : நான் திரும்பிப் போவதற்காக வரவில்லை. நான் எதைக் கண்டும் அஞ்சாதவன். என்னை யாரென்று எண்ணிக்கொண்டாய்? ஏ! கிழக்குரங்கே! நான் ராமதூதராகிய அநுமாரின அருமைத்தம்பி. வாயுவின் மைந்தன். என் தமையனாராகிய ஆஞ்சநேயரின் வாலைக் காட்டிலும் உன் வால் வலிமை மிகுந்ததோ? வாலினால் வழியை அடைத்திருக்கும் வானரமே! இந்த வாலினை ஒரே நொடியில் தூக்கி எறிந்துவிட்டு உன்னைத் தாண்டிச் செல்ல என்னால் எளிதில் இயலும். இவ்வாறு செய்வது முறையன்று என்று எண்ணுகிறேன். வீணில் அவமானப்படாதே. வழியை விட்டு விலகி விடு. நான் விரைந்து செல்ல வேண்டும்.

அநுமார் : மானிடனே! உன் வீரத்தைப் பாராட்டுகிறேன். நான் கிழக் குரங்குதான். என்ன செய்வது? வயதாகிவிட்டது. என் உடல் தளர்ச்சியால் என்னால் நகரவும் முடியவில்லை. எனவே, என் வாலைச் சற்று ஒதுக்கி வைத்துவிட்டு நீ விரும்பும் வழியே செல்.

வீமன் தன் ஆற்றலில் நம்பிக்கையும் உறுதியும் கொண்டவன். எனவே, ஆணவத்துடன் அநுமாரின் அருகில் சென்றான். அநுமாரின் நீண்ட வலிமை மிக்க வாலினைத் தன் இரண்டு கைகளாலும் பற்றினான். பலங்கொண்ட மட்டும் தூக்க முயன்றான். அவனால் அவ்வாலினை அசைக்கக் கூட முடியவில்லை. அவன் உடல் வியர்த்தது; கண்கள் பிதுங்கின; கைகள் தளர்ந்தன. எனவே, வீமன் நாணமுற்று நாத்தழுதழுக்க அநுமாரின் முன் கை கூப்பி வணங்கி நின்றான்.

வீமன் : அண்ணலே! என்னை மன்னிப்பீராக! எனக்கு அருள்புரிவீராக! தங்களின் வலிமை என்னைத் திடுக்கிட வைத்து விட்டது, நீர் இயக்கரா? சித்தரா? தேவரா? தங்களை யாரென்று அறிய முடியாமல் கலங்குகின்றேன். தங்களைப் பற்றிய உண்மையை எனக்கு உரைத்தருள வேண்டுகிறேன்.

அநுமார் : குருகுலத் தோன்றலே! நான் கேசரி என்ற வானரனின் மனைவியாகிய அஞ்சனையின் வயிற்றில் வாயு பகவான் அருளால் பிறந்தவன். சுக்ரீவனிடம் அமைச்சனாகப் பணிபுரிந்து வந்தவன். பின்னர், இராமபிரானுக்குக் கைங்கர்யம் செய்யும் பேறு பெற்றேன். ஸ்ரீராமபட்டாபிஷேகம் கண்டுபேரின்பம் அடைந்தேன். எனக்குச் சிரஞ்சீவித்துவம் தந்த இராமபிரானின் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டு வாழ்க்கையை நடத்திக் கொண்டு வருகிறேன். இதுதான் என் வரலாறு.

வீமன் : அன்பிற்குரியீர்! தாங்கள் என் தமையனாரே என்பதை முன்னரே செல்லியிருக்கக் கூடாதா? நான் தங்களுக்குச் செய்த பிழையைப் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும். தங்களைக் கண் குளிரக் காணும் பேறு பெற்ற நானே சிறந்த பாக்கியவான். தாங்கள் முன்பொரு சமயம் கடலைத் தாண்டும் போது பெருவடிவம் எடுத்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்பெருவடிவத்தை இப்போது அடியேனுக்குக் காட்டியருளல் வேண்டும்.

அநுமார் : தம்பி யுகங்கள் தோறும் தருமங்கள் மாறிக்கொண்டே வருகின்றன. வரவர உயிரினங்களின் ஆற்றல் குறைந்தே காணப்படும். தேவர் மூவர் யாவராயினும் யுகதருமத்தை அனுசரித்தே வாழவேண்டும். எனவே சென்ற யுகத்தில் பெருவடிவம் கொண்ட நான், அந்த வடிவத்தை இப்போது எடுக்க இயலாது என்றே எண்ணுகிறேன்.

வீமன் : அண்ணா! தங்களின் பெருவடிவம் காணாமல நான் இங்கிருந்து செல்லமாட்டேன். எனவே, எனக்குத் தாங்கள் அருள் புரிந்தேயாக வேண்டும்.

வீமனின் உறுதியான சொல்லைக் கேட்டு அநுமார் மகிழ்ச்சியடைந்தார்; வீமன் காணுமாறு விண் முட்டப் பெரிதாக வளரலானார். விண்முட்ட நின்ற அநுமாரின் பெருவடிவம் கண்டு வீமன் அச்சங்கொண்டான். அநுமரின் விசுவரூபத்தை வீமனால் முற்றிலும் காணமுடியவில்லை. பயம் மிகுதியால் வீமன் தன் கண்களை மூடிக்கொண்டான். தன் பெருவடிவத்தைச் சுருக்கிக் கொள்ளுமாறு பணிவுடன் அநுமாரை வீமன் வேண்டிக்கொண்டான். மாருதியும் தன் வடிவினைச் சுருக்கிக் கொண்டார். வீமனுக்கு அறிவுரைகள் பல வழங்கினார். மணம் மிக்க அவ்வற்புதத் தாமரை இருக்கும் இடத்தையும், அவ்விடம் செல்வதற்கான வழியையும் விளக்கமாகக் கூறினார்.

தன் தம்பியாகிய வீமனை அன்புடன் தழுவிக் கொண்டார். இதனால் வீமனது உடல் தளர்ச்சி நீங்கியது. ''வீமா! நீ விரும்பும் வரம் கேள். தருகிறேன்!'' என்று கனிவுடன கூறினார். தங்கடகும், துரியோதனாதியர்க்கும யுத்தம் மூண்டால், அப்போது தங்கட்குத் துணையாக இருந்துதவுமாறு வீமன் அநுமாரை வேண்டிக் கொண்டான். அவரும் அவ்வாறே உதவுவதாக வரம் தந்தார். வாழ்த்துக்கள் பலகூறி வீமனை ஆஞ்சநேயர் அனுப்பி வைத்தார்.

ஆற்றல் இருப்பினும் அடக்கம் இருக்கவேண்டும் என்பதனை உணர்த்துவதற்காகவே அநுமார் வீமனிடம்

இவ்வாறு வேடிக்கை செய்தார். ஆற்றல் மிக்க வீமனும் அநுமரது வாலை அசைக்கக்கூட முடியாமல் திணறினன் என்பது, ஆணவத்தால் எதையும் சாதிக்க முடியாது என்பதை உணர்த்துதற்கேயாம். நாட்கள் சில சென்றன.

அநுமார் இமயமலையிலிருந்து அடிக்கடிச் சேதுவுக்கு வந்து, புண்ணிய நீராடித் தவம் செய்து வரலானார். வேட்டையாடும் நிமித்தம் நெடுந்தூரம் வந்த அருச்சுனன் சேதுக்கரையில் மாருதியைத் தற்செயலாகக் கண்ணுற்றான். அநுமரது வரலாற்றையும் சேது கட்டியதன் காரணத்தையும் அருச்சுனன் ஆஞ்சநேயரை வினவினன். அதற்கு ஆஞ்சநேயர் இராமபிரானின் திருக்கதையையும், வானர வீரர்கள் இலங்கையைக் கடந்து செல்வதற்காக அவ்வணையை இராமபிரான் கட்டிய வரலாற்றையும் அருச்சுனனுக்கு விரிவாக எடுத்துக் கூறினார்.

இவற்றையெல்லாம் கேட்டு அருச்சுனன் நகைத்தான்.

**அருச்சுனன் ;** தவத்திற்சிறந்த சான்றோரே! தங்களின் இணையற்ற இராம பக்தியைக் கேட்டுப் பெரிதும் வியப்படைகிறேன். தாங்கள் எப்பொழுதும் வழிபட்டு வரும் இராமபிரான் திருமாலின் அவதாரமே யென்பதில் சிறிதும் ஐயமில்லை. என்றாலும், எனக்கொரு சந்தேகம் ஏற்படுகிறது. நான் கூறப்போவது ஒரு வேளை தவறாகவும் இருக்கலாம். இருந்தாலும் என் ஐயத்தைப் போக்கித் தாங்களே எனக்கு நல்லறிவு புகட்ட வேண்டும். இராகவர் சிறந்த வில்வீரர் என்றும், அவரது வில்லாற்றலாலேயே அரக்கர்கள் அழிந்தொழிந்தனர் என்பதும் உண்மையே! ஆனால் அத்தகைய வில்லாற்றல் மிக்க இராமபிரான் ஏன் அம்புகளைக் கொண்டு மட்டுமே அணையைக் கட்டியிருக்கக் கூடாது? இதுவே என் சந்தேகம். கோடிக்கணக்கான வானர வீரர்களும் பிறரும் ஒன்று கூடிப்பெரிதும் கஷ்டப்பட்டு இந்த அணையைக் கட்டியிருக்க வேண்டியதில்லையே! அம்புகளாலேயே அணையைக் கட்டியிருப்பாரேல் காலமும் வீணாகியிராது; பலரது உழைப்பும் தேவைப்பட்டிராதே! சரச் சேது கட்டுவது என்பது இராகவர் போன்ற சிறந்த வில்லாளிகட்குப் பெருஞ்செயலல்லவே!

**அநுமார்.** அருச்சுனா! வில்லுக்கு விசயன் என்று உலகம் உன்னைப் புகழ்வதை நான் அறிவேன். வில்லினால் கட்டப்பட்ட அணை வானரங்களைத் தாங்கும் வல்லமையை எவ்வாறு பெறும்? வானரனாகிய என் ஒருவனை மட்டும் கூடத்தாங்கும் வல்லமை சரச் சேதுவுக்கு இராதே! அப்படியிருக்க எழுபது வெள்ளம் வானர சேனைகளை அம்பினால் கட்டப்பட்ட அணை எவ்வாறு தாங்கும் என எனக்குப் புரியவில்லை. இதையறிந்துதான் இராகவர் சரச் சேது செய்யவில்லை. சரச் சேது கட்டுவது என்பது இராமருக்குப் பெரியதொரு செயலா?

**அருச்சுனன் :** பக்தியிற் சிறந்தவரே! தங்களின் பதில் எனக்கு நகைப்பையே உண்டாக்குகிறது. அம்பினால் கட்டப்பட்ட அணை அகில உலகத்தையும் தாங்கும் வல்லமையைப் பெறுமே! அப்படியிருக்க வானரங்களாகிய உங்களைத்தானா அந்த அம்பணை தாங்காது? வானரங்களாகிய உங்களைச் சிறுகொம்புகள் கூடத்தாங்குமே! எழுபது வெள்ளம் சேனைகள் என்ன? எவ்வளவு சேனைகளையும் தாங்கும் வல்லமை அம்பணைக்கு உண்டென்பதை நீர் அறியீரா?

**அநுமார்:**

பார்த்தா! இளமைத் துடிப்பினாலும், உனக்குள்ள வில் திறமையினாலும் நீ ஏதேதோ சொல்லி விட்டாய்! உன் சொற்களைக் கேட்டு நான் வியப்படைகின்றேன். அம்பணையானது என்னைப் போன்றோரைத் தாங்குதல் என்பது முடியாத செயலேயாகும். வேண்டுமானால் இதை நான் உனக்கு நிரூபித்துக் காட்டுகிறேன். நீ வில் வீரன் என்பது உலகறிந்த செய்தி. இதனால்தான் நீ இவ்வாறு கூறி விட்டாய். நீயே அம்புகளைக் கொண்டு அணை ஒன்றைக் கட்டு, நானே அந்த அம்பணையின்மேல் ஏறி நின்று அதனை முறித்துக் காட்டுகிறேன். அவ்வாறு, அந்த அம்பணையை நான் முறிக்காமல் போனால், நான் உனக்கு அடிமைத் தொழில் செய்யக் காத்திருக்கிறேன். இது சத்தியம்!

**அருச்சுனன்:**

பெரியீர்! நீங்கள் அவசரப்பட்டுச் சத்தியம் செய்து விட்டீர்கள் என்றே எண்ணுகிறேன். முடியாத ஒன்றை நம்பியே நீர் சபதம் செய்ததாக எண்ணுகிறேன். நானும் ஒரு சபதம் செய்கிறேன். நான் அம்புகளைக் கொண்டு அணை ஒன்றைக் கட்டுகிறேன் அதை நீர் முறித்துக் காட்டி விட்டால், நான் தீயில் விழுந்து என் உயிரைவிடத் தயாராக இருக்கிறேன்.

இவ்வாறு சபதம் செய்த அருச்சுனன், கடலின்மீது தன் அம்புகளைக் கொண்டு அணையொன்றைக் கட்டினன். ஆஞ்சநேயர் புன்சிரிப்புடன் அவ்வணையின்மீது தன் காலின் கட்டை விரலை வைத்து அழுத்தினார். என்ன அதிசயம்! கடலைத் தாவிய மாருதியின் கட்டை விரலைத் தாங்கும் வலிமையில்லாது அந்த அணை முறிந்து பொடிப் பொடியானது. இதைக் கண்ட தேவர்கள் பூமாரி பொழிந்து அநுமாரை வாழ்த்தினார்கள்.

இதைக் கண்டு அருச்சுனன் பெரி தும நாணினுன்.

"எல்லாம் வலல இராமபிரான் அறிந்தேதான சரச்சேது செய்ய வில்லை போலுமு! வில்லாற்றல் மிகுந் தவன் என்ற செருக்கால் வலிமை மிக்க மாருதியையும, இராமச் சந்திர னின் வில்லாற்றலையும் எள்ளி நகை யாடிய என புன்மதி தான் என்னே! நான் கூறிய சபதப்படித் தீயில் புகுந்து உயிா விடுதலே செய்யத் தக்கது!'' என்று அருச்சுனன் தன் மனத்துள் உறுதிசெய்து கொணடான்.

தன் சபதப்படி, அருச்சுனன் தீயை மூட்டினுன். தீயை வலம் வந்தான். அப்போது வேதிய வடிவங்கொண்ட பிரமசாரி ஒருவர் அங்கே வந்தார். அங்கு நடந்த வரலாற்றை அவர் கேட்டறிந்தார். அருச்சுனனுக்கும், அநுமாருக்கும் இடையே நடைபெற்ற ஒப்பந்தத்தை அவ்வேதியர் உணர்ந்து கொணடார்.

இதனையறிந்த வேதியர் ''நீஙகள் செய்து கொண்ட ஒப்பந்தத்துக்குச் சாட்சியாக இருந்தவர் யார்?'' என்று வினவினுர். சாட்சிகள் யாரும் இல்லை யென்று இருவரும் கூறினர். "மன சாட்சியே பெரியது!'' என்று அருச் சுனன் விடை பகர்ந்தான்.

'சான்றில்லாமல் செய்யப்பட்ட எந்தச் செயலையும் சான்ருேர்கள் ஒப்புக் கொள்ளார். எனவே, என் முன் அம்பினுல் அணைகட்டி, அது முறிந்து விட்டால், உங்கள் சபதப் படியே நீங்கள் இருவரும் நடந்து கொள்ளலாம். எனவே, என் முன் னர் அம்பணையை முன் போலவே கட்டுக!'' என்று வேதியர் கூறினுர்.

வேதியரது வேண்டுகோளை இரு வரும் ஏற்றனர். முன்போலவே, அருச்சுனன் தன் வில்லாற்றலைக் கொண்டு வலிமையான அம்பணை ஒன் றைக் கட்டினுன். அவ்வணையைத் தன் கட்டை விரலால் முன்போலவே மாருதி அழுத்தலானுர். என்ன ஆச் சரியம்! அவ்வணை சற்றும் அசையாமல் அப்படியே நின்றது. இதைக்கண்ட ஆஞ்சநேயர் தம்பலம் முழுவதையும் பயன்படுத்தி அவ்வணையைச் சிதைக்க முயன்ருர். அவர் முயற்சி வெற்றி பெறவில்லை.

அநுமார் தம்முள் பலவாறு எண்ண லானுர்:

''முன்பு என் கட்டை விரலுக் காறருது முறிந்த இந்த அம்பணை இப்போது மட்டும் உறுதியாய் நிற்ப தன் காரணம் என்ன? வந்திருக்கும் வேதியர் மந்திரசாலம் கற்றவரா? இவரது தோற்றம் எனக்கு ஐயத் தையே எழுப்புகிறது. என் ஆண வத்தை அடக்க ஆண்டவனே ஒரு வேளை இந்த வேதியர் வடிவத்தில் வந்துள்ளாரா? இவ்வேதியரைக் கண் டதும் என் உள்ளம் ஏன் உருகுகிறதோ தெரியவில்லையே! தான் கண்ணனுகத் திருவவதாரம் செய்யும் காலத்தில் எனக்குக் காட்சி கொடுப்பதாக முன்பு இராகவர் எனக்கு வரம் தந்திருந் தாரே! அவர்தான் இப்போது வேதி யர் வடிவில் வந்துள்ளாரா? ஒன்றும் புரியவில்லையே! என்ன இது விந்தை யாக உள்ளதே!''

இவ்வாறு பலப்பல எண்ணிய அநு மார் நாணத்தாலும், சிந்தனையாலும் தலை குனிந்து நின்ருர். இதுவரை தலை நிமிர்ந்தே இருந்த ஆஞ்ச நேயருக்கு உண்மை புலப்படாமல் இருந்தது. இப்போது தலை வணங்கி நின்றதால், அவர் உண்மையை உணரத் தொடங்கினுர். 'வணக்கம் வாழ்வு தரும்' அல்லவா?

அந்த அம்பணையை ஸ்ரீசக்கரம் தாங்கி நிற்பதை அநுமார் கண்டு கொண்டார். அவர் கண்கள் ஆனந்தக் கண்ணீரைச் சொரிந்தன.

அப்போது அதிசயம் ஒன்று நிகழ்ந் தது. வேதியராக வநதவர் திருமாலே அல்லவா? திருமால் அருச்சுனனுக்குக் கண்ணபிரானுகவும், ஆஞ்சநேயருக்கு இராமபிரானுகவும் காட்சி தந்தார். வீரர்கள் இருவரும் எம்பெருமானை வணங்கி நின்றனர். வீரர்கள் இரு வரையும் பகவான் பலபடப் பாராட்டி வாழ்த்தினுர்.

பகவான் அநுமாரை நோக்கிக் கூறலானுர்:

''அன்புள்ளம் கொண்டவனே! ஒப் பநதப்படி நீ அருச்சுனனுக்குத் தொணடு செய்ய வேண்டுவதே முறை பாண்டவர்களின் வெற்றியில் உனக் கும் பங்கிருக்க வேண்டும் என்பதற் காகவே இவ்வாறு நாடகம் ஆடினேன். அரக்கர்களை நான் கொன்றது உன் துணையினுலன்ருே! அவ்வாறே, நடை பெறவிருக்கும் பாரத யுத்தத்திலும் உன் துணையாலேயே பாண்டவர்கள் வெற்றி பெற வேண்டும் என்பது என் விருப்பம். எனவே, பாரத யுத்தத் தின்போது நீ அருச்சுனனின் தேர்க் கொடியில் வீற்றிருப்பாயாக! அவ் வாறு வீற்றிருப்பதால், ஒப்பந்தப்படி நீ அருச்சுனனுக்கும் துணை புரிந்ததாக அமையும். நீ கொடியில் வீற்றிருப்ப தோடு, உன் தம்பி வீமன் போர்க் களத்தில் எழுப்பும் வீர முழக்கத்தினை பெரிதுபடுத்திப் பகைவரை நடுங்கவும் செய்வாயாக! இதனுல் துரியோதனுதி யர் போரில் மாய்வது உறுதி! எனவே, என் வேண்டுகோளை ஏற்பாயாக!''

பகவானின் வேண்டுகோளை நிறை வேற்றும் பாக்கியம் தனக்குக் கிடைக் கும் நாளை அநுமார் ஆவலுடன் நோக்கியிருந்தார்.

பகவான் அவ்விடம் விட்டு அகன் ருர். அருச்சுனன் அநுமாரை வணங்கித் துதித்துத் தன் இருப்பிடம் நோக்கிப் புறப்பட்டான்.

'அடக்கத் தெரிந்தவனுக்கு அடங் கவும் தெரிய வேண்டும்' என்பதை இந்நிகழ்ச்சி மூலம் அநுமார் உலகுக்கு எடுத்துக்காட்டினுர். வீமனின் செருக் கை அடக்கினுர். விசயனின் முன் பாக அடங்கினுர். அவர் அறிவுச் சுடரல்லவா?

(அடுத்த இதழில் முடியும்)

# செய்திச் சுருக்கம்

## 5வது ஆண்டு விழா

தி. தி. தேவஸ்தான அச்சக ஊழியர் நல நிதிக்குழுவின் ஐந்தாவது ஆண்டுவிழா 21-11-78 அன்று மாலை திருப்பதியில் வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. இவ்விழாவின் போது, அண்மையில் ஓய்வுபெற்ற தேவஸ்தான அச்சகத்தின் ஃபோர்மேன் (Foreman) திரு. பி. சங்கய்யா அவர்களுக்குப் பிரிவு வாழ்த்துரையும் வழங்கப்பட்டது.

திரு. கிருஷ்ணரெட்டி அவர்களின் இறைவணக்கப் பாடலைத் தொடர்ந்து விழாவுக்கு வருகைபுரிந்தோரை அச்சக மேலாளார் திரு. எம். விஜயகுமார் ரெட்டி அவர்கள் வரவேற்றார். பின்னர் விழா மலர்க்குழுத் தலைவர் திரு. பி. மோகன்ராவ் அவர்கள் தாம் வாசித்த ஆண்டறிக்கையில் அச்சகத்தின் தினசரி பணிகளைக் குறிப்பிட்டு, அச்சகத் தொழிலாளர்களுக்குத் தேவையான சிற்றுண்டி விடுதி, ஓய்வு பெற்ற தொழிலாளர் பிள்ளைகளுக்கு தேவஸ்தானத்தில் வேலை, ஓய்வு பெறும் ஒவ்வொரு தொழிலாளர்களுக்கும், அது போது மேலாண்மையின் சார்பாக ஒரு குறிப்பிட்டத் தொகை வழங்கப்படுவதன் அவசியம் ஆகியவற்றை மேலாண்மை மேற்கொள்ள வேண்டுமென்றும் குறிப்பிட்டார். விழாவிற்குத் தலைமை தாங்கி உரையாற்றிய, தி. தி. தேவஸ்தான பொது ஜனத் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்யநாராயணமூர்த்தி அவர்கள், அச்சகத் தொழிலாளர்களின் கடமைகளைக் குறிப்பிட்டு, மேலாண்மைக்கு லாபம் தரும் வகையில் அவர்கள் காலத்தைப் பொன்னுகக் கருதி செயற்படவேண்டியதன் அவசியத்தையும் எடுத்துக் கூறினர். விழாவிற்கு வருகை புரிந்து சிறப்புரை வழங்கிய தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள், தி.தி. தேவஸ்தானத்தின் துறைகளான அச்சகம், நூல் வெளியீட்டுப்பிரிவு, விற்பனைத்துறை ஆகியவை சேர்ந்து செயற்படவேண்டியதன் அவசியத்தைக்குறிப்பிட்டு, அச்சகத் தொழிலாளர்களின் அடிப்படைப் பிரச்சனைகளை மேலாண்மை மனிதாபிமானத்தோடு அணுகும் என்று உறுதி அளித்தார். பின்னர் ஓய்வுபெற்ற, அச்சகத்தினமுன்னுள் ஃபோர்மேன் திரு. பி. சங்கய்யாவுக்கு, செயலாட்சித் தலைவர், அச்சகத்தின் சார்பில் பண முடிப்பு ஒன்று வழங்கி கௌரவித்தார். இவ்விழா சம்பந்தப்பட்ட மலர் ஒன்றினை வெளியிட்டுப் பேசிய திரு. பி. பலராம் ரெட்டி அவர்கள், தனக்கும் தேவஸ்தான அச்சகத்திற்கும் இருக்கும் 30 ஆண்டு கால நட்புறவினை விளக்கிக் கூறினர். பின்னர் திரு. பி. மோகன்ராவ் அவர்கள் நன்றி நவின்றார்.

## வேத கருத்தரங்கு

திருப்பதியில் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலாமந்திரத்தில் 2-12-78 முதல் 6-12 78 வரை 5 நாட்கள் இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் ஆதரவில் வேதம் சம்பந்தப்பட்ட கருத்தரங்கு ஒன்று நடைபெற்றது. இக்கருத்தரங்கிற்கு சென்னையைச் சார்ந்த பேராசிரியர். ராகவன் அவர்கள் தலைமை வகிக்க, கருத்தரங்கினை, ஆந்திர மாநில அறநிலையத் துறை அமைச்சர் திரு. வி. வெங்கடநாராயணு அவர்கள் துவக்கி வைத்தார். 2-12-78 அன்று காலை 11 மணி அளவில் துவக்கப்பெற்ற கருத்தரங்கு விழாவிற்கு வருகைபுரிந்தோரை தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் ஐ.ஏ.எஸ். அவர்கள் வரவேற்றார். அவர் பேசுகையில், வேத உபநிஷத்துக்களிலும், சாஸ்திரங்களிலும் தேர்ச்சி பெற்ற பண்டிதர்களும், தேவஸ்தான நிருவாகத்தினரும் ஒன்று கூடி விவாதித்தால் தான், வேத கலாசாரத்தின் பெருமையைப் பரப்புதற்கும், வேதம் மற்றும் வட மொழி கற்ற பண்டிதர்களையும் அவர்கள குடும்பத்தினரையும் காப்பாற்றி ஊக்குவிக்கும் வகையிலும் திட்டங்கள் பல உருவாக ஏதுவாகும் என்று கூறினர். வேத கலாசாரத்தைக் காப்பாற்றுவது ஒரு தனிப்பட்ட நிறுவனம் அல்லது ஒரு அரசின் கடமை என்று நினைக்காது அதன் வளர்ச்சியில் பொது மக்களும் போதுமான கவனம் செலுத்துதல் அவசியம் என்று குறிப்பிட்டார். டாக்டர். டி. அர்க்க சோமயாஜி அவர்கள் ஆண்டறிக்கையை வாசித்ததைத் தொடர்ந்து, அமைச்சரவர்கள் கருத்தரங்கினை துவக்கி வைத்து உரையாற்றுகையில், நாம் நம்முடைய பழமையான வேத கலாசாரத்தின் பெருமையைப்பற்றி பேசுகின்றோமே தவிர, செயலளவில் அதனைப் பாதுகாத்து வளர்க்கும் விதத்தில் எந்தவிதமான திட்டங்களையும் மேற் கொள்ளவில்லை என்று கூறினர். இந்தியாவின் பெருமைக்கு சிறப்பு சேர்க்கும் வகையில் திகழும் சம்ஸ்கிருதம் மறைந்தால் சமுதாயப் பண்பே அழிந்துவிடும் என்று அறிவுறுத்தினர். தொடர்ந்து பேசுகையில், கோயில் வருமானத்தின் ஒரு குறிப்பிட்ட பெரும் பகுதி, இந்து சமயத்தின் மேம்பாட்டிற்காகச் செலவழிக்கப்படல் வேண்டுமென்ற தன் கருத்தினை பல காரணங்களைக் கொண்டு வலியுறுத்தினர்.

பின்னர், திருப்பதி யோகா நிலையத்தின் செயலாளரான திரு. மேல்கோட்டே அவர்கள் பேசுகையில், வேதங்களில் காணப்படும் ஸ்லோகங்களுக்கு விஞ்ஞான ரீதியான விளக்கங்கள் பல கொடுத்தார். விழாவிற்குத் தலைமைவகித்து உரையாற்றிய வடமொழி அறிஞர் பேராசிரியர் ராகவன் அவர்கள், சமுதாயத்தில் காணப்படும் சமூகவியல், அரசியல், வேளாண்மை போன்ற பல்வேறு துறைகளைச் சார்ந்த பிரச்சனைகளுக்குரிய தீர்வுகள் வேதங்களில் காணக் கிடைக்கின்றன என்று குறிப்பிட்டு, வட மொழியின் சிறப்பையும் அதனை

வளர்க்க வேண்டியதன் அவசியத்தையும், பண்டைய 'குருகுலவாச' கல்வி முறையின் சிறப்பையும் விளக்கிக் கூறினர். தொடர்ந்து பேசுகையில் வேத உபநிஷத்துக்கள், சாஸ்திரங்கள் மற்றும் சம்ஸ்கிருதம் ஆகியவற்றின் பெருமையை காக்கும் விதத்தில், 'கீழை நாட்டு வாடிகனுக' விளங்கும் திருமலை திருப்பதி தேவஸ்தானம் எல்லா வகையிலும் முயற்சிகள் பல வற்றை மேற்கொள்ள வேண்டும் என்ற கேட்டுக் கொண்டார். டாக்டர். டி. அர்க்க சோமயாஜி அவர்கள நன்றி நவின்றார். அன்று மாலையும், அடுத்த நான்கு நாட்களின் போதும் வேதம் சம்பந்தப்பட்ட பல் வேறு தலைப்புக்களில் அறிஞர் பெரு மக்கள் பலருடைய சிறந்த சொற் பொழிவுகள் நடைபெற்றன. இறுதி நாளன்று 18 அறிஞர் பெருமக்களுக்கு பண முடிப்பு வழங்கப்பட்டு கௌர விக்கப்பட்டனர்.

## கபிலேஷ்வர ஸ்வாமி கோயில் மகாகும்பாபிஷேகம்

ஸர்வ வ்யாபியாக பகவானை வேத மந்திர சக்தியைக் கொண்டு மஹநீயர்களால் லோக க்ஷேமத்தின் பொருட்டு ஓர் இடத்தில் ஸ்தாபிக்கப்பட்டதே கோயிலென்று கூறுவர். இது கால காலமாக தேவாதிகளால் பூஜிக்கப் பட்டது. தற்காலத்தில் எல்லோருடைய அசுசியாலும், அபாரதத்தாலும் கோயிலுக்கு தோஷம் ஏற் படலாம். ஆகவே பகவத்க்ருபையை எல்லோரும் பெற 30 ஆண்டுகளுக்கு ஒரு முறையாவது கும்பாபிஷேகம் செய்ய வேண்டுமென்பது சிவாகமங் களின் கொள்கை. ஸகல பரிவார தேவதைகளுடன் பரமேஸவரனை ஆவாஹனம் செயது வேதபாராயணம இதிஹாஸாதி பாராயணங்களும் நிய மித்தோடு செய்து, சிவாச்சாரியார் களைக் கொண்டு விமான கலசங்களுக் கும் ஸகல பரிவார தேவதைகளுக்கும் இறைவிக்கும் இறைவனுக்கும் வேத மந்திர பூததீர்த்தாபிஷேகம், திருக்கல்யாண மகோற்சவம் செய் வித்து, 45வது நாளன்று மண்டல பூர்த்தி அபிஷேகம செயது முடிப்பது மகாகும்பாபிஷேகமாகும். இதனல் ஸகல அபசாரம், அபராதம நீங்கி, நாடு எல்லா நலனும் பெறம் என நம்பப்படுகிறது.

இவ்வகையில் திருப்பதியிலுள்ள ஒரே சிவன் கோயிலான ஸ்ரீ காமாட்சி சமேத ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில் கும்பாபிஷேகம் 13-12-78 அன்று காலை 9 மணி அளவில் மிகச் சிறப்பாக தொடங்கியது. திருக்கழுக் குன்றம் சிவாகம வித்துவான் ஸ்ரீ ஸ்ரீ தியாகராஜ சிவாச்சாரியார் ஸர்வ சாதகம் வகிக்க, காளஹஸ்தி எஸ். எம். கே. பரசுராம குருக்கள் பி.ஏ.பி.எல். அவாகளால் ஆசார்யம் செய்யப்பட்டு இக்கும்பாபிஷேகம் இனிது துவங்கியது

தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி.வி.ஆர்.கே. பிரஸாத், உதவி செயலாட்சித் தலைவர் திரு. பி. நரசிம்மா ராவ், பொது ஜனத் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்ய நாராயணமூர்த்தி, திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தான கோயில்களின் பெயிஷ்கார் திரு. ஜி. வெங்கடரெட்டி மற்றும் பல தேவஸ்தான அலுவலர் களுமவருகை புரிநது இககும்பாபி ஷேகத்தைக் கணடு களிததனர். கிடைத்த தகவல்களிலிருந்து இக் கோயிலின் முதல் கும்பாபிஷேக விழா 20-2-1902 அன்றும், இரணடாவது கும்பாபிஷேகம் 29-6-1931 அன்றும், மூன்றாவது கும்பாபிஷேகம் 28-2-70 அன்றும் நடைபெற்றன.

## 9வது ஆண்டுத் தொடக்க விழா

திருவேங்கடவன் பல்கலைக் கழக தமிழ் மன்றத்தின் 9-வது ஆணடுத் தொடக்க விழா டிசம்பா 4-ம் தேதி தமிழ்த்துறைக் கட்டிடத்தில் நடந்தது.

திருவேங்கடவன் பல்கலைக் கழக வேதியியல் துறைத் தலைவர் பேராசிரியர் வி. ஆர். கிருஷ்ணன் அவர்கள் தலைமை தாங்கினர்கள் தமிழர் உயர்ந்தால்தான் தமிழ் உயரும் என்று அவர்கள் வலியுறுத்திப் பேசினர். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் சி. பால சுப்பிரமணியன் அவர்கள் சிறப்புப் பேச்சாளராக கலந்து கொண்டார். தம் சொற்பொழிவில் அவர், சங்க இலக்கியம் முதல் தற்கால இலக்கியம் வரை உள்ள பல சுவையான பகுதிகளை அழகுற எடுத்து விளக்கினர். தமிழ் நாடு வேளாணமையியல் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் திரு. எல். எஸ். கந்தசாமி அவர்கள் புதுக் கவிதை என்பதைப்பற்றி உள்ளங் குளிரும்படி பேசினர். தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர். கு. தாமோ தரனர் அவர்கள் மன்றத்தின் செயல் களையும் துறை செய்ய இருக்கும் பணி களையும் சுருக்கமாக விவரித்து வரவேற் புரை வழஙகினர். மாணவர் தலைவி செல்வி. லில்லி பாய் மன்றத்தின சார்பாக வந்திருந்தோர்க்கு வரவேற் புரை கூறினா. செயலர் திரு. ஆ. சுதாகர் அனைவருக்குமநனறி கூற நாட்டு வாழ்த்துடன் விழா இனிது நிறைவேறியது. ★

---

**ஸப்தகிரி** வாசகர்களுக்கும், விற்பனைப் பிரதிநிதிகளுக்கும், கட்டுரை ஆசிரியர்களுக்கும் எங்கள் உளங்கனிந்த **புத்தாண்டு** மற்றும் **பொங்கல்** வாழ்த்துக்கள் உரித்தாகுக !

— ஆ. ர்.

# ராசிபலன் (1-1-79 முதல் 31-1-79 வரை)

டாக்டர் டி: அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி:

## மேஷம்

(அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய)

ராகுவினால் கவலைகள். சனியினால் பண நஷ்டம் அல்லது தன் மக்களிடமிருந்து பிரிவு அல்லது கருத்து வேறுபாடுகள். குருவினால் மனயமைதி கெடல். சுக்ரனால் பணவரவு, அல்லது மகிழ்ச்சி அல்லது வீடு வாங்குதற்குரிய வாய்ப்பு. சூரியனால் மாதத்தின் முதன் 15 நாட்களின்போது உடல் நலம் கெடல்,ஆனால்இறுதிநாட்களின்போது பண வரவு மற்றும் வெற்றி. செவ்வாயினால் மாதத்தின் முதல் 12 நாட்கள் வரை பண நஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது உடல் நலம் கெடல் ஆனால் இறுதியில் பண வரவு. புதனால் மாதத்தின் 4-ம் தேதி வரை நனமைகள் அடையப் பெறல், 5-ம் தேதி முதல் 24-ம் தேதி வரை கெடுதிகள் ஏற்படல் ஆனால் இறுதி நாட்களின்போது பண வரவு, எதிர்ப்புகளை வெற்றி கொளல், மகிழ்ச்சி.

## ரிஷபம்

(கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய)

ராகுவினால் கருத்து வேறுபாடுகள்: சனியினால் பண நஷ்டம் அல்லது உற்றார் உறவினரிடமிருந்து பிரிவு. குருவினால் ஏமாற்றங்கள். சுக்ரனால் பெண்களின் மூலம் துன்பங்களுக்குள்ளாதல். சூரியனால் உடல் நலம் கெடல் அல்லது மனைவிக்கு மகிழ்ச்சியின்மை அல்லது பண நஷ்டம் அல்லது முயற்சிகள் தோல்வி அடைதல். செவ்வாயினால் பண நஷ்டம அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல். புதனால் மாதத்தின் 4-ம் தேதி வரை கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல, ஆனால் 5-ம் தேதி விருந்து 24-ம தேதி வரை வெற்றி, லாபம் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள், இறுதி நாட்களின்போது ஏமாற்றங்கள, முயற்சிகள் தோல்வி அடைதல் போன்றன நடைபெறும.

## மிதுனம்

(மிருக சீரிஷம 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

ராகுவினால் பண வரவு. சனியினால் பொருள் வரவு அல்லது வாகன வாய்ப்பு, உடல் நலமேன்மை, குடும்பத்தில் மகிழ்ச்சி. குருவினாலும் பண வரவு மற்றும வெற்றி. சுக்ரனால் உடல் நலம் கெடல் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல். சூரியனால் மாததநின் முதல் 15 நாட்களின்போது பிரயாணமும், உடல் நலம் கெடலும். இறுதி 15 நாட்களின்போது மனைவிக்கு மகிழ்ச்சியின்மை மற்றும ஏமாறறங்கள். செவ்வாயினல மனைவியுடன் கருத்து வேறுபாடு கொளல அல்லது கண் அல்லநு வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதிப்படல் அல்லது பண நஷ்டம் மற்றும் மதிப்புக் குறைதல். புதனால் மாதத்தின் 4-ம் தேதி வரை வெற்றி, 5-ம் தேதி முதல் 24-ம் தேதி வரை கருத்து வேறுபாடுகள், மாதத்தின் இறுதி நாட்களின் போது வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது மக்கட்பேறு:

## கடகம்

(பூனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)

ராகுவினாலும், சனியினாலும் பண நஷ்டம். குருவினால் பண நஷ்டம் அல்லது கருத்து வேறுபாடுகள். சுக்ரனால் பண வரவு, புதிய நண்பர்கள் அல்லது மக்கட்பேறு, பெரியோர்களால் புகழ்படல், புதிய உறவுகள். செவ்வாயினால் மாதத்தின் 12-ம் தேதி வரை பண வரவு, வெற்றி அல்லது புதிய வீட்டு மரச்சாமான்கள் வாங்குதல் ஆனால் இறுதி நாட்களின்போது மனைவியுடன் கருத்து வேறுபாடு கொளல் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதியுறல். புதனால் 4-ம் தேதி வரை குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள், 5-ம தேதியிலிருந்து 24-ம் தேதி வரை வெற்றி அல்லது பதவி உயர்வு, 25-ம் தேதி முதல் மறுபடியும் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல். சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நலமேன்மை, எதிரிகளை வெற்றி கொளல் ஆனால் இறுதி 16 நாட்களின்போது பிரயாணம் மற்றும் வயிறு சம்பநதப்பட்ட நோயினால் அவதிப்படல்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல பாதம் முடிய)

ராகுவினால் கவலைகள்: சனியினால் உற்றார் உறவினருடன் பிரிவு அல்லது பிரயாணம், உடல் நலம் கெடல், பண நஷ்டம் அல்லது தீய நடவடிக்கைகளை மேற்கொளல். குருவினால் பிரயாணமும், உடல் நலம் கெடலும். சுக்ரனால் புதிய நல்ல நட்புறவுகள், மகிழ்ச்சி. செவ்வாயினால் மாதத்தின் 12-ம் தேதி வரை உடல் நலம் கெடல் அல்லது தன் மக்கள சம்பந்தமாக கவலைகளுக்குள்ளாதல் அல்லது எதிரிகளால் அல்லது தன்னுடைய செய்கையினால் அச்சங்களுக்குள்ளாதல். ஆனால் இறுதி நாட்களின்போது பண வரவு, வெற்றி. சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது எதிரிகளால் துன்பங்களுக்குள்ளாதல், அல்லது உடல் நலம் கெடல் ஆனால் இறுதி 16 நாட்களின்போது உடல் நல மேன்மை, எதிரிகளை வெற்றி கொளல். புதனால் மாதத்தின் 4-ம் தேதி வரை பண வரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி. 5-ம் தேதி முதல் 24-ம் தேதி வரை குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள், இறுதி நாட்களின் போது வெற்றி மற்றும் பதவி உயர்வு.

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம முடிய)

ராகுவினால் பண நஷ்டம். சனியினால் கவலைகள். குருவினால் பண வரவு, மதிப்புயர்தல், புதிய ஆடை ஆபரணங்கள் மற்றும் வெற்றி. செவ்வாயினால் மாதத்தின முதல் 12 நாட்கள் வரை உடல் நலம் கெடல் அல்லது எதிரிகளால் கெடுதிகள் ஏற்படல், இறுதி நாட்களின்போது தன் மக்களால் துன்பங்களுக்குள்ளாதல் அல்லது உடல் நலம் கெடல் அல்லது எதிரிகள் ஏற்படல். சூரியனால் உடல் நலம் கெடல் அல்லது எதிரிகளால் துன்பங்களுக்குள்ளாதல். புதனால் மாதத்தின் 4-ம் தேதி வரை தன்னுடைய செய்கையின் விளைவுகளை எதிர்பார்த்து அஞ்சுதல், 5-ம் தேதி முதல் 24-ம் தேதி வரை குடும்பத்தில் மகிழ்ச்சி, ஆனால் இறுதி நாட்களின்போது குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள்.

## துலா

(சித்திரை 3-ம்பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

ராகுவினால் மகிழ்ச்சி. சனியினால் பண வரவு மற்றும் மகிழ்ச்சி. ஆனால் குருவினால் பண நஷ்டம் மற்றும் ஏமாற்றங்களுக்குள்ளாதல். சுக்ரனால் பண வரவு, தானிய வகைகள் கிடைக்கப்பெறல், மதிப்புயர்தல் அல்லது மக்கட்பேறு. சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண வரவு, மதிப்புயர்தல் எதிர்ப்புகளை வெற்றி கொளல். ஆனால் இறுதி நாட்களின்போது உடல் நலம் கெடல். செவ்வாயினால் முதல் 12 நாட்களின் போது தன் பிள்ளைகள் அல்லது தவறான வழியின் மூலம் பண வரவு, இறுதி நாட்களின்போது உடல் நலம் கெடல் அல்லது எதிரிகளால் துன்பங்களுக்குள்ளாதல். புதனால் மாதத்தின் முதல் 24 நாட்கள் வரை ஏமாற்றங்கள், தீய நடவடிக்கைகளில் பங்கேற்றல் ஆனால் இறுதியில் குடும்பத்தில் மகிழ்ச்சி.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய)

ராகுவினால் கருத்து வேறுபாடுகள்; சனியினால் பண நஷ்டம் அல்லது மதிப்புக் குறைதல். குருவினால் பண வரவு அல்லது தானிய வகைகள் கிடைக்கப்பெறல், வெற்றி அல்லது மக்கட்பேறு. சுக்ரனால் மகிழ்ச்சி. செவ்வாயினால் மாதத்தின் முதல் 12 நாட்கள் வரை அலுவலகக் கவலைகள் அல்லது எதிரிகளால் அல்லது திருடர்களால் கவலைக்குள்ளாதல் அல்லது உடல் நலக்குறைவு. ஆனால் இறுதி நாட்களின்போது தன் பிள்ளைகள் அல்லது தவறான வழியின் மூலம் பண வரவு. சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண நஷ்டம் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல் ஆனால் இறுதி நாட்களின்போது பண வரவு அல்லது தன்னிலை உயர்தல். புதனால் மாதத்திம் 4-ம் தேதி வரை பண நஷ்டம், 5 முதல் 24-ம் தேதி வரை இகழ்ச்சிக்குள்ளாதற்குரிய வாய்ப்புக்கள் இறுதி நாட்களின்போது தான் மேற்கொண்ட செய்கையினால் அஞ்சுதல்.

## தனுசு

(மூலம, பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

ராகுவினால் தீய நடவடிக்கைகளை மேற்கொளல்; சனியினால் கருத்து வேறுபாடுகள் அல்லது உடல் நலக் குறைவு அல்லது தீய நடவடிக்கைகளை மேற்கொளல். குருவினால் உடல் நலம் கெடல் அல்லது பிரயாணம். சுக்ரனால் பணவரவு ஆனால் அதிக வீண் செலவுகள். சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல் நலம் கெடல், பண நஷ்டம் ஆனால் இறுதி 16 நாட்களின்போது கண் சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல் அல்லது பொருள் நஷ்டம் அல்லது ஏமாற்றப்படல். செவ்வாயினால் அலுவலகக் கவலைகள் அல்லது எதிரிகளால் கவலைகளுக்குள்ளாதல் அல்லது தவறான ஆலோசனைகளைக் கேட்டதன் விளைவாக பண நஷ்டம்.

## மகரம்

(உததிராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

ராகுவினால் கவலைகள். சனியினால் உற்றார் உறவினருடன் பிரிவு. குருவினால் பண வரவு, மகிழ்ச்சி. சுக்ரனால் பண வரவு, புதிய நல்ல நட்புறவுகள் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள். சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது கெடுதிகள் ஏற்படல். ஆனால் இறுதி 16 நாட்களின்போது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல் அல்லது பொருள் நஷ்டம். செவ்வாயினால் கெடுதிகள் மற்றும் கவலைகள். புதனால் மாதத்தின் 4-ம்தேதி வரை பண வரவு, நண்பர்கள், மகிழ்ச்சி, 5-ம் தேதி முதல் 24-ம் தேதி வரை ஏமாற்றங்கள் அல்லது உடல் நலம் கெடல். இறுதி நாட்களின் போது கருத்து வேறுபாடுகளினால் அல்லது தவறான ஆலோசனையால் அல்லது ஏமாற்றப் படுவதால் பெருத்த பொருள் நஷ்டம.

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

ராகுவினால் கருத்து வேறுபாடுகள். சனியினால் பிரயாணம். குருவினால் மனயமைதி பறிமோதல். சுக்ரனால் கருத்து வேறுபாடுகள், இகழ்ச்சிகளுக்குள்ளாதல். சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண வரவு, வெற்றி, மதிப்புயர்தல் ஆனால் இறுதியில் வீண் ஆடம்பர செலவுகள். செவ்வாயினால் மாதத்தின் முதல் 12 நாட்கள் வரை வெற்றி, மகிழ்ச்சி. ஆனால் இறுதியில் பண நஷ்டம், கவலைகள். புதனால் மாதத்தின் முதல் 24 நாட்கள் வரை பண வரவு, வெற்றி, மகிழ்ச்சி அல்லது வாகன வாய்ப்பு அல்லது மக்கட் பேறு. இறுதி நாட்களின்போது உடல் நலக்குறைவால் அல்லது எதிரிகளால் அல்லது இகழ்ச்சிக்குள்ளாவதால் கவலைகளுக்குள்ளாதல்.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம முதல, உத்திரட்டாதி, ரேவதி முடிய)

ராகுவினால் பண வரவு. சனியினால் உடல்நல மேன்மை, வெற்றி. குருவினால் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், மகிழ்ச்சி அல்லது மக்கட்பேறு. சுக்ரனால் பண வரவு, அல்லது புதிய ஆடை ஆபரணங்கள். சூரியனால் வெற்றி, பண வரவு, உடல நல மேன்மை. செவ்வாயினால் பண வரவு மற்றும் வெற்றி. புதனால் மாதத்தின் முதல் 4 நாட்கள் வரை ஏமாற்றங்கள் ஆனால் இறுதி நாட்களின்போது வெற்றி, பண வரவு, வாகன வாய்ப்பு அல்லது மக்கட் பேறு. ★




EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI- 517501

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரி பூஜைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

### சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | முதல் | 4-30 | வரை | சுப்ரபாதம் |
| 4-30 | ,, | 5-30 | ,, | விஸ்வரூப சர்வதரிசனம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | சுத்தி முதலியவைகள் |
| 6-00 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7 30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 1-00 | மதியம் | ஸர்வ தரிசனம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாநதம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸாவ தரிசனம |
| 8-00 | ,, | 9-30 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம, இரவு மணி |
| 9-00 | ,, | 10-00 | ,, | சுத்தி முதலிவைகள |
| | | 10-00 | | ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்) |

### புதன் கிழமைகளில (ஸஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | ,, | 4-30 | ,, | சுப்ரபாதம் |
| 4-30 | ,, | 5-30 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | சுத்தி முதலியவை |
| 6-00 | ,, | 7-00 | , | தோமால சேவை (ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 10-00 | ,, | ஸஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள் |
| 10-00 | ,, | 1-00 | மதியம் | ஸஹஸ்ர கலசாபிஷேகம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8 00 | ,, | 9-30 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவுமணி முதலியவைகள் |
| 9-30 | ,, | 10-00 | ,, | சுத்தி முதலியவைகள் |
| | | 10-00 | | ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்) |

### வியாழக்கிழமைகளில (திருப்பாவாடை உத்ஸவம் நடைபெறுவதால)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | ,, | 4-30 | ,, | சுப்ரபாதம |
| 4-30 | ,, | 5-30 | ,, | விஸ்வரூப தரிசனம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | சுத்தி முதலியவை |
| 6-00 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 11-00 | ,, | சாலிம்பு, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடா, அலங்காரம், மணி முதலியவை, |
| 11-00 | ,, | 5-00 | மாலை | ஸர்வ தரிசனம் |
| 5-00 | ,, | 5-30 | ,, | சுத்தி முதலியவை |
| 5-30 | ,, | 7-00 | ,, | பூலங்கி சமாப்பணம் |
| 7-00 | ,, | 8-00 | ,, | இரவுகைங்கர்யம், இரவுமணி |
| 8-00 | ,, | 9-30 | ,, | பூலங்கி சேவை (ஆர்ஜிதம்) |
| 9-30 | ,, | 10-00 | ,, | சுத்தி முதலியவை |
| | | 10-00 | | ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்) |

### வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 5-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 5-00 | ,, | 7-00 | ,, | சாலிம்பும், நித்ய கட்டளையும், கைங்கர்யங்களும் (ஏகாநதம்) |
| 7-00 | ,, | 9-00 | ,, | அபிஷேகம |
| 9-00 | ,, | 11-00 | ,, | அபிஷேகானநதார தரிசனம் (ஆர்ஜிதம்) |
| 11-00 | ,, | 12-30 | மதியம் | சமர்ப்பணம |
| 12-30 | ,, | 2-00 | மாலை | தோமால சேவை அர்ச்சனை (தனி) மணி, பலி, சாத்துமுறை |
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-30 | ,, | சுத்தி, இரவுகைங்கர்யங்கள், இரவு மணி |
| 9-30 | ,, | 10-00 | ,, | சுத்தி முதலியவை |
| | | 10-00 | | ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்) |

குறிப்பு : விழா நாட்களின்போதும, சிறப்பு நிகழ்ச்சி களின் போதும் மேற்கூறிய நிகழ்ச்சிநிரல்கள் தேவையின் பொருட்டு மாற்றப்படும்.

Regd. No. H. TRP 12



திருப்பதிக்கு . . . . . . வருகை புரியுங்கள்!!



திருப்பதி

ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில்

# தெப்போற்சவம்

**(7-2-79** முதல் **11-2-79** வரை)